ஆகும் சக்தியை ராஜூ எவ்வாறு பெற்றான் என்பதைப் படியுங்கள்

# கேமல் சேம்ப்

அன்பார்ந்த நண்பர்களே,

இன்று பள்ளிக்கூடத்தில் ஒரு ஜோக் செய்தேன்.

கேமல் ஆயில் பேஸ்டல் உபயோகித்து ஒரு அழகான பட்டுப்பூச்சியைப்போல் வண்ணம் தீட்டி கரும்பலகையில் ஒட்டி வைத்தேன். பார்ப்பதற்கு இது மிக அழகாக இருந்தது.



வண்ண ஜாலத்துடன் இயறகையாக இருந்தது. ஒவ்வொருவரும் ஏமாந்து போனார்கள். அவர்கள் அதை நிஜமானப் பட்டுப்பூச்சி என்று நினைத்தார்கள். அது மட்டுமல்ல, இரண்டு பட்டுப்



பூச்சிகளும் அதைச் சுற்றி வட்டம் வந்தன, அதனுடன் சிநேகம் செய்து கொள்ள. என்ன வேடிக்கை! நான் உண்மையில் ஒரு கேமல் சேம்ப். எவ்வாறெனில் உண்மையான பட்டுப்பூச்சிகளையும் நான் கேமல் ஆயில் பேஸ்டல் கொண்டு ஏமாற்ற முடியும்.






உன் அன்புள்ள,

ராஜூ



# கேமல் சேம்ப்

## போட்டி

**நீங்கள் ஒரு கேமல் சேம்ப்பாக வேண்டுமா மற்றும் கவர்ச்சிகரமான பரிசுகளையும் வெல்ல வேண்டுமா ? இது வெகு சுலபம்.**

கேமல் வண்ண அணிவரிசை கொண்டு கலர் பவர் உபயோகித்து இந்த படத்திற்கு வண்ணம் தீட்டுங்கள். கேமல் தயாரிப்புகளான க்ரேயானா வேக்ஸ் க்ரேயன்ஸ், க்ரேபாஸ், ஆயில் பேஸ்டல்ஸ், வாட்டர் கலர் அல்லது போஸ்டர் கலர் ஏதாவது ஒன்றை உபயோகியுங்கள். பல கவர்ச்சிகரமான பரிசுகளை வெல்லும் வாய்ப்பு உள்ளது.

**1 ஆம் பரிசு** கேமல் பம்பர் கேக்கி பேக் (ரூ. 150 மதிப்புள்ள பல்வேறு கேமல் தயாரிப்புகள் அடங்கிய) **2 ம் பரிசு** கேமல் மிடி பேக் (ரூ. 100 மதிப்புள்ள பல்வேறு கேமல் தயாரிப்புகள்) **3 வது பரிசு** (ரூ. 75 மதிப்புள்ள பல்வேறு கேமல் தயாரிப்புகள்) மற்றும் 125 ஆறுதல் பரிசுகள் — ஒரு சூப்பர், வண்ணமயமான "நான் ஒரு கேமல் சேம்ப்" இலவச ஸ்டிக்கர்.

ஆம், நான் ஒரு கேமல் சேம்ப்பாக விரும்புகிறேன். இதோ என் நிறைவு செய்யப்பட்ட சித்திரம்.

பெயர்: ____________ வயது ______ ஆண்/பெண் சிறுவர்/சிறுமியர் (தயவு செய்து குறிப்பிடவும்)

வீட்டு முகவரி: ____________

பள்ளியின் பெயர்: ____________

போட்டி நிபந்தனைகள்: • நுழைவுக் கட்டணம் கிடையாது. [illegible] • [illegible] 15 வயது [illegible] • [illegible] • கேமலின் [illegible] • [illegible] 37439, ஜேபி நகர், அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400059, [illegible] 15 [illegible] • [illegible] • [illegible]

கேமல்

வெற்றி பெறும் வண்ணங்கள்

INTERACT VISION CL/94/7/77AM




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி

## அனுபவம் ஒரு உரைகல்

மே 24 புத்த பூர்ணிமா நாள். இளவரசர் சித்தார்த்தர் பௌர்ணமியில் கி.மு. 567-ல் பிறந்தார் என்றும் நாற்பது ஆண்டுகளுக்குப் பின் பௌர்ணமி அன்று புத்தர் ஆனார் என்றும் அதற்கு நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு பௌர்ணமி அன்று நிர்வாண முக்தி அடைந்தார் என்றும் கூறப்படுகிறது.

புத்தர் இகலோக துயரங்களைக் கண்டு மனம் வெதும்பி உண்மையைக் காண அலைந்து முடிவில் போதி மரத்தடியே அமர்ந்து ஞானம் பெற்ற கதை யாவரும் அறிந்ததே.



அவரது அறிவுரைகளில் இது சீடர்களுக்குக் குறிப்பாக கூறியது. உயர்ந்தவர் சொன்னார் என்று ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்ளாதே. வழக்கில் உள்ளது என்றும் ஏற்காதே. ஏதோ ஒரு நூலில் கூறியுள்ளது என்றும் ஏற்றுவிடாதே. ஆசிரியர் சொன்னார் என்றும் ஏற்காதே. ஆனால் எதையும் உன் அனுபவத்தையும் ஆராயும் அறிவையும் கொண்டு ஒரு முடிவுக்கு வா.

புத்தர் கூறியது அனுபவபூர்வமானது. இப்படி முடிவு எடுக்கவே ஒவ்வொருவரும் முயல வேண்டும். நீ பார்ப்பதையோ, கேட்பதையோ படிப்பதையோ அப்படியே நம்பிவிடாமல் அனுபவம் என்ற உரை கல்லில் தேய்த்துப் பார்க்க வேண்டும். இப்படிக் கிடைக்கும் அறிவை ஒருவர் எல்லோருடனும் பகிர்ந்து கொள்ளவே வேண்டும்.



மதிமுகம் : 94 மே 1994 புன்னகை : 5

தனிப்பிரதி : ரூ. 4.00 வருட சந்தா : ரூ. 48.00



செய்திகளும் தகவல்களும் :

# உழவர்களுக்கு அரசியல் கௌரவம்




புத்தாண்டு வாழ்த்துக்களை நாடுகள் பரிமாறிக் கொண்டிருக்கையில் மெக்சிகோ உழவர்கள் ஆயுதப் போராட்டம் நடத்தினார்கள். கடந்த இருபது ஆண்டுகளில் இது மிக பயங்கர வன்முறை எனக் கருதப்படுகிறது.

"எங்களுக்கு எதுவும் மிஞ்சவில்லை. இருக்க இடமில்லை. எங்கள் நிலம் எனக் கூற எதுவும் கிடையாது. வேலை எதுவும் கிடைப்பதில்லை. கல்வி பெற வசதி இல்லை நோய்க்கு மருந்து கிடைப்பதில்லை. இதனால் அரசுக்கு எதிராகப் போராட்டம் நடத்துவதைத் தவிர வேறு வழியே இல்லை. இதுவே எங்கள் கடைசி முடிவு" என்கிறார் கலகக்காரர்களின் தலைவர் கமாண்டெண்ட் மார்க்கோஸ். 1910–ல் நடந்த விவசாயிகள் புரட்சிக்குத் தலைமை தாங்கிய எமிலியன் ஜபாடாவினால் ஊக்கம் பெற்று ஜபாடிஸ்டா தேசிய விடுதலைப்படையை நிறுவியதாக மார்க்கோஸ் கூறுகிறார்.

தென் மெக்சிகோவில் சியாபான் என்ற பிற்பட்ட பகுதியில் பெரும்பான்மையினர் விவசாயிகளே. ஆளும் கட்சியான 'இன்ஸ்ட்டியூஷனல் ரெவல்யூஷனரி பார்ட்டி'யின் அடக்குமுறைக்கு ஆளாகி மக்கள் அவதிப்பட்டார்கள். தற்போதைய அரசாங்கம் பணக்காரர்களான எஸ்டேட் எஜமானர்களோடு சேர்ந்து விவசாயிகளின் நிலங்களை எல்லாம் அந்த முதலாளிகள் கைப்பற்றிக் கொள்ள உதவியது. சிறு காப்பி விவசாயிகளின் பயிர்களுக்குச் சரியான

விலை கொடுப்பதும் இல்லை. எதிர்த்துக் கேட்டால் விவசாயிகள் துன்புறுத்தப்பட்டார்கள். அதிகாரிகளின் உதவியோடு இந்த முதலாளிகள் ஏழை மக்களின் நிலங்களை ஆக்கிரமித்தனர். இதனால் விவசாயிகள் எதிர்த்துக் கலகம் செய்யத் துணிந்தனர்.

ஜனவரி முதல் தேதியன்று அமெரிக்கா, கனடா, மெக்சிகோ ஆகிய நாடுகள் செய்து கொண்ட வியாபார ஒப்பந்தம் இக்கலகத்திற்கு அடிகோலியது. இந்த ஒப்பந்தப்படி அமெரிக்கப் பொருள்களும் தானியமும் தாராளமாகத் தடையின்றித் தம் நாட்டில் விற்பனைக்கு வரும் என்று விவசாயிகள் பயப்பட்டார்கள். அதனால்தான் கலகம் மூண்டது.

சுமார் இரண்டாயிரம் விவசாயிகள் சான்கிருஸ்டபால், டெலாஸ்காசஸ், ஒகாசிங்கோ, மார்க்கரிட்டாஸ், அல்ட்ராமாரினோ ஆகிய மலை நகரங்களை மூன்று நாட்கள் தம் வசத்தில் பிடித்து வைத்திருந்தனர். முன்னூறு கொரில்லா வீரர்கள் கிரிஸ்ட்பால் நகர சபை அலுவலகத்தைத் தாக்கி அங்கிருந்த கோப்புகள், நாற்காலி மேஜைகள், கம்ப்யூட்டர்கள் ஆகியவற்றை அடித்து நொறுக்கினார்கள். பல அரசாங்க அலுவலகங்களும் மாளிகைகளும் கடுமையாகத் தாக்கப்பட்டன. சிறையிலிருந்து 180 கொரில்லா வீரர்களை விடுவித்துக் கொண்டு போனார்கள்.

மார்க்காசின் படை கலகக்காரர்களை காட்டுக்குள் துரத்தியது. 200 கொரில்லா வீரர்களைச் சுட்டு வீழ்த்தியது. கொரில்லா வீரர்கள் தாக்குவார்களோ எனப் பயந்து மக்கள் நகரங்களை விட்டு ஓடினர்.

இதற்கு இன்னொரு காரணம் பிஷப் சாமுவேல் ரூயான் என்பவரை அரசாங்கம் ஏசியதும் ஆகும். ஆனால் பிஷப் அதைப் பொருட்படுத்தாமல் அரசாங்கத்தை எச்சரித்தார். விவசாயிகளை வாழவிடாமல் செய்யும் அதிகாரம் அரசாங்கத்திற்கு இல்லை என அவர் முழங்கினார்.

எழுபது ஆண்டுகளாக ஆட்சி பீடத்தில் இருந்து வரும் அதிகார வர்க்கம் இனியும் விவசாயிகளை அலட்சியப்படுத்த முடியாது எனப் புரிந்து கொண்டது. வரும் ஆகஸ்டில் நடக்கப் போகும் தேர்தல் மெக்சிகோவின் எதிர்காலத்தை நிர்ணயிக்கும்.

**மெக்சிகோ - சில வரலாற்றுக் குறிப்புகள்**

- உலகில் அதிக மக்கள் ஸ்பானிஷ் மொழி பேசப்படும் நாடு.
- 16வது நூற்றாண்டு வரை மாயா இந்தியர்கள் ஆண்டனர்.
- 1520 லிருந்து 1820 வரை இங்கு ஸ்பெயின் நாட்டு ஆட்சி.
- 1821-ல் ஸ்பெயினிடமிருந்து விடுதலை பெற்றது.
- 1846-48-ல் அமெரிக்காவுடன் போர்.
- 1848-ல் மாயா இந்தியர் கலகம் அடக்கப்படுதல்
- 1910-ல் ஜபாடா தலைமையில் விவசாயிகள் கலகம்
- 1917-ல் புதிய அரசியல் முறையில் ஆட்சி ஆரம்பம்
- 1920-ல் இன்ஸ்ட்டியூஷனல் ரெவல்யூஷனரி பார்ட்டி அதிகாரத்திற்கு வந்தது




# பெயர் வேண்டுமா?

கருப்பூர் சந்தையில் கந்தப்பன் என்ற கிழவன் "பெயர்கள் விற்கப்படும். வாங்கிக் கொள்ளுங்கள்" என்று உரக்கக் கூவிக் கொண்டிருந்தான். அவன் போர் வீரனாக இருந்து போரில் ஒரு காலை இழந்தவன். ஆனாலும் அவனுக்கு மன்னனிட மிருந்து எந்த மானியமும் கிடைக்க வில்லை.

இப்படிக் கூவிக் கொண்டிருந்த கந்தப்பனை சந்தைக்கு வந்தவர் களெல்லாம் பைத்தியக்காரன் என்று கூறிக் கேலியாகச் சிரித்தனர். ஆனால் அச்சந்தைக்கு வந்த திருடன் காளியப் பன் மட்டும் கந்தப்பனிடம் பேசித் தான் பார்க்கலாமே என்று நினைத்து அவனருகே போய் "ஏய் கிழவா! யாராவது பெயரைக் காசு கொடுத்து வாங்குவார்களா?"என்று கேட்டான்.

கந்தப்பனும் "நான் விற்கும் பெயர் கள் சாதாரணப்பட்டவை அல்ல. அவற்றால் லட்ச வராகன் கிடைக் கும். ஒரு பெயர் விலை இருபத்தை யாயிரம் வராகன். பணத்தைக் கொடுத்தால் பெயரைக் கொடுக் கிறேன்" என்றான்.

அது கேட்டு காளியப்பன் பல மாகச் சிரித்து "பெயரைப் பற்றி விவரம் தெரிந்து கொள்ளாமல் எவ னாவது இருபத்தையாயிரம் வராகன் களைத் தூக்கிக் கொடுத்து விடு வானா? நீ என்னை நம்பி ஒரு பெய ரைச் சொன்னால் அதைக் கொண்டு எனக்கு கிடைக்கும் பணத்தில் உனக் குப் பாதியைக் கொடுத்து விடு கிறேன்" என்றான்.

கந்தப்பனும் காளியப்பனை உற் றுப் பார்த்து விட்டு "சரி. உன்னை நான் நம்பி ஒரு பெயரைச் சொல் கிறேன். அதனால் நீ நிறையப் பணம் அடைவாய். உனக்குக் கிடைக் கும் பணத்தில் வாக்குத் தவறாமல்

- சிவனார் செல்வன் -



நீ பாதியைக் கொடுத்து விட வேண்டும். நீ சொன்ன சொல் தவறாமல் நடந்து கொண்டால் இன்னொரு பெயரைக் கூடப் பிறகு உனக்குச் சொல்வேன்" என்றான். காளியப்பனும் பெயரைக் கூறு எனவே கந்தப்பனும் விவரமாகக் கூறலானான்.

"சில வருடங்களுக்கு முன் நம் நாட்டு எல்லையிலுள்ள ஒரு காட்டில் இருந்த ஒரு புலி மக்களைத் துன்புறுத்தி வந்தது. அந்தப் புலியைக் கொல்பவனுக்கு லட்சம் வராகன் கொடுப்பதாக மன்னர் அறிவித்தார். இதற்குச் சில நாட்களுக்குப் பின் இறந்து போன புலியின் உடல் அப்பகுதியில் கிடைத்தது. அந்தப் புலியைக் கொன்றவன் யாரெனத் தெரியாமல் போகவே மன்னர் நன்கு விசாரிக்க ஆட்களை அனுப்பினார். அவர்களுக்கு அப்புலியைக் கொன்றவன் கோதண்டபாணி எனத் தெரிந்தது. ஆனால் இதுவரை கோதண்டபாணி என்று யாரும் மன்னர் முன் பரிசை கேட்க வரவில்லை. அதனால் நீ மன்னரிடம் போய் நீதான் அந்தக் கோதண்டபாணி என்று கூறி லட்சம் வராகன்களைப் பெற்று வா. அதில் பாதியை எனக்குக் கொடு" என்றான்.

இவ்வாறு கூறியது கேட்டு காளியப்பன் தன் உருதெரியாதிருக்க மாறு வேடம் அணிந்து மன்னரைக் கண்டு தானே புலியைக் கொன்ற கோதண்டபாணி எனக் கூறிப் பரிசைப் பெற்றுக் கொண்டான். ஆனால் அவன் கந்தப்பனுக்குப் பணம் கொடுக்கவில்லை. அவன் கந்தப்பனிடமிருந்து மற்றொரு பெயரையும் தெரிந்து கொண்டு மேலும் ஒரு லட்சம் வராகன் பெற ஆசைப்பட்டான்.

சில நாட்களுக்குப் பின் காளியப்பன் கருப்பூர் சந்தைக்குப் போய் கந்தப்பனைக் கண்டான். அவனிடம் "நீ இன்னொரு பெயரையும் சொல். இன்னொரு லட்சம் கிடைக்கும். ஆளுக்கு லட்சம் என்று வைத்துக் கொள்ளலாம்" என்று ஆசை காட்டினான். கந்தப்பனும் "நீ கொடுக்கப் போகும் ஐம்பதாயிரம் வராகன்களைக் கொண்டு என் மகளின் கல்யாணத்தை நடத்த நினைத்தேன்.

நீ என்னை ஏமாற்றப் பார்க்கிறாயே" என்றான்.

காளியப்பனும் "அதெல்லாம் இல்லை. லட்சம் வராகன்கள் கிடைத்தால் நீ உன் மகளின் கல் யாணத்தைச் செய்து விட்டு ராஜா போல இருக்கலாம். என்னை நம்பு" என்றான்.

கந்தப்பனும் "சரி, நம்புகிறேன். நான் சொல்வதைக் கேள். வெகு காலத்திற்கு முன் இமயமலையி லிருந்து யோகிராஜர் என்ற மா முனிவர் இந்த நாட்டிற்கு வந்தார். அவர் அப்போதைய இந்நாட்டு மன் னனைச் சந்தித்து ஏழு தலை முறைக்கு அவரது வம்சம் செழுமையுடன் இருக்கும் என்று ஆசி கூறிவிட்டுச் சென்றார். போகும் போது அவர் அம் மன்னனிடம் "உன் ஆறாவது தலைமுறையில் வந்த மன்னனை ஆசீர்வதிக்க நானே நேரில் வருவேன்" என்று கூறிச் சென்றார். இப்போ துள்ள நம் மன்னர் அந்த வம்சத்தின் ஆறாவது தலைமுறையில் வந்தவர். எனவே நீ முனிவர் வேடம் அணிந்து அவரிடம் நீதான் யோகிராஜர் எனக் கூறு. உனக்குக் காணிக்கையாக லட்சம் வராகன்களுக்கு மேலாகக் கிடைக்கும். நீ எனக்கு லட்சம் வராகன்கள் கொடுத்தால் போதும். மற்றதை நீயே வைத்துக் கொள்" என்றான்.

காளியப்பனும் முனிவர் வேடம் அணிந்து மன்னரைக் கண்டு தானே யோகிராஜர் என்றும் அவரை ஆசீர் வதிக்க வந்திருப்பதாகவும் கூறினான்.





மன்னரும் மகிழ்ந்து முனிவராக வந்த காளியப்பனுக்கு ஏராளமாக காணிக்கை சமர்ப்பித்தார். அவை எல்லாம் இரண்டு மூன்று லட்ச வராகன்கள் பெறும். அவற்றோடு காளியப்பன் மன்னரிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பி வந்து விட்டான். காளியப்பன் தானடைந்த பணத்தில் நகரில் பெரிய மாளிகை வாங்கி அதில் சுகமாகக் காலம் கழிக்கலானான். ஆனால் அவன் கந்தப்பனுக்கு செப்பால் அடித்த ஒரு காசு கூடக் கொடுக்கவில்லை.

சில நாட்கள் கழிந்தபின் காளியப்பன் கருப்பூருக்குப் போய் கந்தப்பன் எப்படி இருக்கிறான் எனக் காணச் சந்தைக்குச் சென்றான். அவன் வருவான் எனப் பல நாட்களாக எதிர் பார்த்த கந்தப்பன் அவனைக் கண்டும் காணாதவன் போல "பெயர் விற்கிறேன். விலை மதிப்புள்ள பெயர்" என்று உரக்கக் கூவினான்.

காளியப்பன் அவனிடம் போய் "என்னை ஏமாற்றி விட்டாயே. இரண்டு பெயர்களே விற்பனைக்கு இருப்பதாகச் சொன்னாயே. இப்போது ஏது பெயர்கள்?" என்று கேட்டான். கந்தப்பனும் "நீ தான் என்னை ஏமாற்றினாய். இரண்டு பெயர்களை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டாய். கிடைப்பதில் பாதியைக் கொடுப்பதாகவும் கூறினாய். ஆனால் எதுவுமே கொடுக்கவில்லையே" என்றான். காளியப்பனும் "போனது போகட்டும். இன்னொரு பெயரைச் சொல். போன முறை மன்னர் காணிக்கையாகக் கொடுத்த இரண்டு லட்சத்திற்கும் மேல் மதிப்புள்ள பொருள்களை எல்லாம் கடவுள் சாட்சியாக உனக்குக் கொடுக்கிறேன்" என்றான்.

கந்தப்பனும் "சரி. நீ உன்னை பலவீரன் என்ற மகாவீரன் என்று சொல்லிக் கொண்டு மன்னர் முன் போ. வேஷம் கூடப் போட வேண்டாம். ஏனென்றால் மன்னர் அவனைப் பார்த்ததுகூட இல்லை. பெயரைக் கேட்டாலே நடுநடுங்கி உன்னை நண்பனாக்கிக் கொண்டு ஏராளமாகப் பணம் தருவார்" என்

றான்.

காளியப்பனும் மன்னனின் தர்பாருக்குப் போய் "அரசே! நான் தான் பலவீரன்" என்று உரக்கக் கூறி அட்டகாசமாய்ச் சிரித்தான்.

மன்னன் அமைச்சரைப் பார்த்தார். அமைச்சரும்"பலவீரன் துரோகி. நம் படைபலம் பற்றி எதிரிக்குத் தகவல் கொடுத்தவன். ஆனால் அவன் கொல்லப்பட்டான். இவன் யார் என எனக்குத் தெரியும்" எனத் தாழ்ந்த குரலில் கூறினார்.

பிறகு அமைச்சர் "அடே! நீயா பலவீரன்? நான் அவனைப் பார்த்திருக்கிறேன. நீ யாரென்றும் எனக்குத் தெரியும். நீ பக்காத் திருடன் காளி. இவ்வளவு நாளாகப் பல திருட்டுகளைச் செய்து விட்டு தலைமறைவாய் இருந்தாய். இன்று அகப்பட்டுக் கொண்டாய்" என்று கூறி வீரர்களுக்குச் சைகை செய்தார். மறுநிமிடமே வீரர்கள் சட்டெனப் பாய்ந்து காளியப்பனைப் பிடித்துக் கொண்டார்கள்.

காளியப்பன் நடுநடுங்கி "ஐயோ! நொண்டி கந்தப்பன் இப்படியா என்னை மாட்டி விட்டான்?" என்று அலறினான். அப்போது அமைச்சார் "யார் அந்தக் கந்தப்பன்?" என்று கேட்கவே அப்போது தர்பாரில் இருந்த கந்தப்பன் தடியை ஊன்றிய வாறே எழுந்து வந்து "நான்தான் அரசே! தங்களது முன்னாள் படை வீரன். போரில் காயமுற்றுக் காலை இழந்தவன்" என்று சொல்லி காளியப்பன் தன்னை ஏமாற்றியதையும் விவரமாகக் கூறினான்.

மன்னனும் "அடடா! உன்னை சரியாக கவனிக்கவில்லை. நீ இந்தத் திருடனைப் பிடித்துக் கொடுத்தாய். அதற்காக உனக்கு லட்சம் வராகன் பரிசளிப்பதோடு மானியமாக நிலமும் அளிக்கிறேன்" என்றான்.

கந்தப்பனுக்கு பரிசு கிடைத்தது. காளியப்பனுக்கோ சிறை தண்டனை கிடைத்ததோடு அவனது சொத்தும் பணமும் பறிமுதல் செய்யப் பட்டது.



# நேர்மையானவன்தான்!

மருதாசலம் என்ற பண்ணையாருக்கு மாடுகளை மேய்க்க ஒரு ஆள் தேவைப்பட்டது. அதை அறிந்து மாடன் என்ற இளைஞன் அவரைக் கண்டான். அவரும் "நீ நம்பிக்கையானவன் என்றும் நன்றாக உழைப்பவன் என்றும் தெரிந்தாக வேண்டும். இதற்கு முன் இருந்தவன் ஒரு மாட்டைத் திருட்டுத்தனமாக விற்று விட்டு புலி அடித்துக் கொன்று சாப்பிட்டு விட்டதாகப் பொய் சொன்னான். ஆனால் இந்தப் பகுதியில் புலியே கிடையாது" என்றார்.

மாடனும் "ஐயா! நான் அப்படிப் பட்டவன் இல்லை" எனவே பண்ணையாரும் "சரி, இன்று என் மாடுகளை ஓட்டிப் போய் மேய்த்து விட்டு வா பார்க்கலாம். அதன் பிறகு வேலைக்கு வைத்துக் கொள்வது பற்றித் தீர்மானிக்கலாம்" என்றார்.

மாடனும் மாடுகளை ஓட்டிக் கொண்டு போய் விட்டு மாலையானதும் அவற்றைத் திருப்பி ஓட்டி வந்தான். அவன் பண்ணையாரிடம் "நான் எல்லா மாடுகளையும் ஓட்டி வந்து விட்டேன். ஆனால் அந்தக் கருப்புக் காளை மாத்திரம் மந்தையோடு சேராமல் தனியாக மெதுவாக நடந்து வந்தது" என்றான். அவன் கருப்புக் காளை என்று குறிப்பிட்டது எருமை மாட்டைத்தான். அதைத்தான் மாடன் குறிப்பிட்டான் என்று கண்ட பண்ணையார் அவன் அப்பாவி, கள்ளம் கபடமற்றவன் எனக் கண்டு அவர் அவனை வேலைக்கு வைத்துக் கொண்டு விட்டார்.





# அதிசய மலர்

## 13

*(ராட்சஸ மிருகத்தைத் தேடிக் கொண்டு உத்தமன் செல்ல அவனோடு படைத் தலைவன் நாகசிம்மனும் தன் வீரர்களோடு சென்றான். ஆனால் நாகசிம்மன் உத்தமனைக் கடலில் தள்ளி விட்டான். உத்தமன் நீந்தி கரை சேர்ந்து நாகபுரி மன்னனிடம் நடந்ததைக் கூறினான். யாவரும் கடற்கரைக்கு வந்தனர். ராட்சஸ மிருகம் படகுகளைப் பின்பற்றி வந்தது கண்டு அதன் மீது தீப்பந்தங்களை எறிந்தனர். ராட்சஸ மிருகம் எரிந்து போயிற்று. பிறகு-)*

உத்தமன் சில வீரர்களுடன் கடற்கரைக்கு வந்து நின்றான். வெகு நேரம் வரை அவர்கள் தீவட்டிகளோடு நின்றனர். ஆனால் கடலிலிருந்து யாரும் வரவில்லை. அதிகாலையில் யாரோ ஒருவன் சிரமப்பட்டு கடலிலிருந்து கரைக்கு வர முயன்று கொண்டிருந்தான். அது கண்ட உத்தமன் கடலில் குதித்து அவனைக் கரைக்கு இழுத்து வந்தான்.

அவன் நாகசிம்மனோடு படகில் சென்ற வீரன். அவன் மிகவும் களைத்துப் போயிருந்தான். அவனது சோர்வைப் போக்கி உத்தமன் உட்கார வைத்தான். அவன் மிரள மிரள விழித்து "ராட்சஸ மிருகம் ஒழிந்து விட்டதா?" என்று கேட்டான்.

உத்தமனும் "தெரியாது. கடலில் எரிந்து போயிருக்குமே. நாங்கள்



இங்கிருந்து ராட்சஸ மிருகத்தின் மீது தீவட்டிகளை எறிந்து தாக்கினோம். அதனால் அது தீயில் கருகிப் போயிருக்கலாம். இன்னமும் அதுபற்றி எதுவும் உறுதியான தகவலைக் கூற முடியவில்லை" என்றான். அப்போது அந்த வீரனும் "ஆமாம். நாகசிம்மனும் இறந்தான். எங்களை எல்லாம் தனக்கு உதவச் சொன்னான் ராட்சஸ மிருகத்தோடு நாகபுரிக்கு வந்து இதன் மன்னனாகப் போவதாகவும் அப்போது எங்களை நன்கு கவனித்துக் கொள்வதாகவும் கூறினான். அவன் அதிசய மலர் கொண்டு அதனைக் கரைக்குக் கொண்டு வர முயன்றான். ஆனால் ராட்சஸ மிருகம் அவனது படகைத் தாக்கி மூழ்கச் செய்தது. அதுவும் எரிந்து போயிற்று" என்றான்.

உத்தமனும் "அப்படியானால் நாகசிம்மனும் இறந்தான், ராட்சஸ மிருகமும் எரிந்து கடலில் விழுந்தது என்றா கூறுகிறாய்?" என்று கேட்டான். அந்த வீரனும் "ஆமாம் அந்த இரு சம்பவங்களையும் என் கண்களால் கண்டேன்" என்றான்.

உத்தமனும் "சரி என்னோடு வா. நாம் போய் சேனாதிபதியைக் காண்போம். அவரிடம் நீயே கடலில் நடந்ததைச் சொல்" என்றான். அவனும் சரி எனவே அவனை அழைத்துக் கொண்டு உத்தமன் கிளம்பினான்.

அப்போது சூரியோதயம் ஆகிக் கொண்டிருந்தது. கடற்கரையில் மனிதனின் உடல் போல ஒன்று அலைகளால் ஒதுக்கித் தள்ளப்பட்டிருப்பதை உத்தமன் கண்டான். அதனருகே சென்று பார்த்தபோது அந்த உடலின் பல இடங்களில் தீப்புண்கள் உள்ளதைக் கண்டான்.

பார்க்கவே பயங்கரமாக இருந்த அந்த உடலைக் கண்ட உத்தமன் "இது ராட்சஸ மிருகத்தின் உடலாக இருக்கலாம். இங்கே இரண்டு வீரர்கள் இதனைக் காவல் காக்கட்டும். இந்தச் செய்தியையும் நான் மன்னரிடம் தெரிவிக்கிறேன்" என்று கூறினான்.

அவன் அந்த வீரனோடு தலைநகரை அடைந்து சேனாதிபதியின்

மாளிகைக்குச் சென்றான். சேனாதி பதியுடன் காயாம்புவும் இருந்தான். அவன் உத்தமனைக் கண்டதும் "வீரர் கள் திரும்பி வந்து விட்டார்களா? நாகசிம்மன் எங்கே?" என்று கேட் டான். உத்தமனும் தான் அழைத்து வந்த வீரனைக் காட்டி "இவன் நீங் கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் கூறுவான். கடலிலிருந்து தப்பி வந்த வீரன் இவன்" என்றான்.

வீரனும் நாகசிம்மன் வீரர்களுக்கு ஆசை காட்டியது, உத்தமனைக் கட லில் தள்ளியது, அதிசய மலரைக் காட்டி நாகசிம்மன் ராட்சஸ மிருகத் தைப் பின்னால் வரச் செய்தது, தீப் பந்தங்கள் ராட்சஸ மிருகத்தின் மீது வந்து விழுந்தது, அது எரிந்து போனது ஆகியவற்றை விவரமாகக் கூறினான். முடிவில் அவன் "நாக சிம்மன் கடலில் விழுந்து மூழ்கிப் போனதை நான் கண்டேன். அவன் இறந்துதான் போயிருக்க வேண்டும்" என்றான்.

உத்தமனும் "இவன் சொல்வது சரியே. ஏனெனில் நாங்கள் கரையி லிருந்து எரிந்த தீவட்டிகள் ராட்சஸ மிருகத்தின் மீது விழுந்திருக்கின்றன. அவை அதனை எரித்திருக்கின்றன என்பதும் தெரிந்து விட்டது. ஏனெ னில் எரிந்த ராட்சஸ மிருகத்தின் உடல் கடற்கரை ஓரம் ஒதுக்கப் பட்டது. அதனைப் பாதுகாக்க இரு வீரர்களையும் வைத்துவிட்டு வந் தேன்" என்றான்.



எல்லாவற்றையும் கேட்டு "நாக சிம்மன் இறந்து போனான் என்பதில் சந்தேகமில்லை இதை இப்போது மன்னரிடம் சொல்ல வேண்டாம். ராட்சஸ மிருகம் ஒழிந்ததை மட்டும் கூறுகிறேன்" எனக் கூறி மன்னனைக் காண அரண்மனைக்குச் சென்றான். அவனோடு மற்றவர்களும் சென்ற னர்.

உத்தமனும் வீரனும் கூறியதை சேனாதிபதி மன்னனிடம் தெரிவித் தான். எல்லாவற்றையும் கேட்ட மன்னன் "உத்தமா! நீ மாணிக்கபுரி யோடு நாகபுரியையும் காப்பாற்றி னாய். உன்னை எவ்வளவு பாராட்டி னாலும் தகும். நீ இளைஞர்களுக் கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்கு



எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். எனவே எனக்கு விரைவில் விடை கொடுத்து அனுப்புங்கள்" என்று வேண்டினான்.

மன்னன் உத்தமனைத் தட்டிக் கொடுத்து "சபாஷ். உன் நாட்டுப் பற்றை மிகவும் பாராட்டுகிறேன். உன் விருப்பப்படியே செல். ஆனால் இன்று வேண்டாம். நாளை முழு மரியாதையுடன் நான் உன்னை அனுப்பி வைக்கிறேன்" என்றான்.

உத்தமனும் அதை ஏற்கவே காயாம்புவும் "அப்படியானால் உத்த மனை இன்று நான் அழைத்துப் போய் விட்டு நாளை இங்கு கொண்டு வந்து விட்டு விடுகிறேன். இதற்கு அனுமதிக்க வேண்டும்" என்று மன்ன னிடம் கேட்டுக் கொண்டான். மன்ன னும் அனுமதிக்கவே காயாம்பு உத்த மனை அழைத்துக் கொண்டு தன் குடியிருப்பிற்குச் சென்றான்.

உத்தமனை கண்டதும் அங்கிருந்த யாவரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய் தனர். அவனது வீரச் செயல்களைப் பாராட்டி அவர்கள் அவனுக்கு நல்ல விருந்து அளித்தார்கள்.

விருந்திற்குப் பின் ஆடல்களும் பாடல்களும் கொண்ட நிகழ்ச்சிகள் அமைக்கப்பட்டன. அவற்றை மற்ற வர்களோடு சேர்ந்து உத்தமனும் ரசித்தான். சித்ராவும் அவளது தோழி களும் ஆடிய நடனம் அவன் மனதை வெகுவாகக் கவர்ந்தது. இரவில் வெகுநேரம் வரை அந்த நிகழ்ச்சிகள்

கிறாய். நீ சம்மதித்தால் என்னிடமே படைத் தலைவனாகப் பணி புரிய லாம்" என்றான்.

சேனாதிபதியும் "உத்தமன் மட் டும் நம் படையில் இருந்தால் மலைச் சாதி இளைஞர்களெல்லாம் படையில் சேர்ந்து விடுவார்கள்" என்று உற் சாகத்தோடு கூறினான். காயாம்புவும் "அந்த நிலையில் எங்களுக்கு உத்த மனே தலைவனாகவும் விளங்கு வான்"என்றான்.

உத்தமன் கொஞ்ச நேரம் எதுவும் பேசாமல் இருந்தான் பிறகு அவன் "நீங்கள் என் மீது கொண்ட அன் பிற்கு நன்றி. ஆனால் மாணிக்கபுரிக்கு நான் சென்றாக வேண்டும். என் வருகைக்காக அங்கு எல்லோரும்

நடந்தன.

அன்றிரவு உத்தமன் அங்கேயே நன்கு தூங்கினான். காலையில் எழுந்தபோது சித்ரா அதிசயமலர்ச் செடியை நட்டுத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருப்பதை அவன் கண்டான் சித்ராவும் "இது நீங்கள் கொடுத்தது. உங்களை நினைத்து நினைத்து இதைப் பார்த்து ஆறுதல் அடைவேன். நீங்கள் தாம் எங்களை விட்டுப் போய் விடப் போகிறீர்களே" என்று கூறினாள். அவளது கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் சிதறின.

உத்தமனும் அது கேட்டு மனம் இளகிப் போனான். அவன் புறப்படும் வேளையும் வந்தது. எல்லோரும் அவனுக்கு அன்புடன் விடை கொடுத்து அனுப்பினார்கள். அவனும் காயாம்புவும் விரைவில் தலை நகரை அடைந்தார்கள்.

மன்னனும் உத்தமனின் வருகையை எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தான். உத்தமனும் காயாம்புவும் மன்னனை வணங்கினார்கள். மன்னனும் மரியாதையுடன் அவர்களை வரவேற்று தர்பாருக்கு அழைத்துச் சென்று நன்கு அலங்கரிக்கப்பட்ட ஒரு ஆசனத்தில் உத்தமனை அமரச் செய்தான்.

எல்லோரும் அமர்ந்த பின்னர் சேனாதிபதி எழுந்து உத்தமனைப் புகழ்ந்து பாராட்டுரை வழங்கினான். அதுகேட்டு யாவரும் கரவொலி



எழுப்பித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். மன்னனும் அவனது வீரத்தையும் தாய் நாட்டுப் பற்றையும் பாராட்டி முத்து மாலை ஒன்றைப் பரிசாக அளித்தான்.

உத்தமன் மன்னனையும் அரசியையும் வணங்கினான். அருகிலிருந்த இளவரசியும் "ராட்சஸ மிருகத்தினின்று எங்கள் நாட்டைக் காத்ததற்காக மிக்க நன்றி" என்றாள். உத்தமனும் மரியாதையுடன் சிரம் தாழ்த்திப் பிறகு சேனாதிபதியருகே வந்து நின்றான்.

சேனாதிபதியும் "ராட்சஸ மிருகத்தின் உடல் நேற்றே புதைக்கப்பட்டு விட்டது. உன்னை மரியாதையுடன்



கள் கைகளில் அதிசய மலர்கள் இருந்தன. அவை கடலால் அடித்துக் கரை சேர்க்கப்பட்டவை. அவற்றில் கொஞ்சம் இளவரசி மல்லிகாவிற்கும் கொடுக்குமாறு கூறிவிட்டு உத்தமன் தன் படகில் ஏறிக் கொண்டான்.

காயாம்புவும் "உத்தமா! நீ வந்து எங்களுக்கு உற்சாகத்தை மூட்டிவிட்டாய். பெருமைபடச் செயல்கள் புரிந்தாய். நம் மலைச் சாதியினருக்குத் திலகம் போல விளங்குகிறாய். உன்னை மறக்கவே முடியாது. நாங்களும் உன் போல வீரச் செயல்கள் புரிய நம் இளைஞர்களை ஊக்குவிக்கப் போகிறோம்" என்றான். அவன் மகள் சித்ராவும் "எங்களை எல்லாம் மறந்து விடாதீர்கள்" எனக் கூறி விடை கொடுத்தாள்.

உத்தமன் படகில் உட்கார்ந்ததும் அது மெதுவாக நகரலாயிற்று. அதன் பின்னால் இரண்டு படகுகள் சென்றன. சேனாதிபதி கூறியபடி உத்தமனை மாணிக்கபுரிவரை மரியாதையுடன் கொண்டுபோய்விட அதில் வீரர்கள் இருந்தார்கள். அப்படகுகள் விரைவிலேயே மாணிக்கபுரிக் கடற்கரையை அடைந்தன.

அப்படகுகள் வந்து கொண்டிருப்பது மாணிக்கபுரி சேனாதிபதி கம்பீர வர்மனுக்குத் தெரிவிக்கப் பட்டது. அவன் கடற்கரைக்கு வந்தான். அப்போதே கரை இறங்கிய உத்தமன் "ஒழிந்தது ராட்சஸ மிருகம்" என்று அவனிடம் கூறினான். அவ

மாணிக்கபுரிக்குக் கொண்டு போய் விட இரு படகுகளில் எம் வீரர்கள் உடன் வருவார்கள். உன்னை வழியனுப்பக் காயாம்புவும் வருவான் இனி நீ கிளம்பிச் செல்லலாம்" என்று கூறினான்.

உத்தமன் எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டான். காயாம்பு உடன் செல்ல உத்தமன் கடற்கரைக்குச் சென்றான். அங்கு அவனது படகு நன்கு அலங்கரிக்கப்பட்டுத் தயாராக இருந்தது. அதில் நாகபுரி மன்னன் அளித்த ஏராளமான பரிசுப் பொருள்கள் இருந்தன.

காயாம்புவின் மகள் சித்ராவும் அவளது தோழிகளும் கடற்கரையில் நின்று கொண்டிருந்தார்கள். அவர்

னும் "மன்னர், ராணி, இளவரசி என் தங்கை ஆகியோர் நலமாக இருக்கிறார்களா" என்று கேட்டான். சேனாதிபதியும் "யாவரும் நலமே" எனக் கூறி உத்தமனோடு நகரை நோக்கிச் சென்றான்.

போகும் வழியில் உத்தமன் ராட்சஸ மிருகம் எவ்வாறு கொல்லப் பட்டது என்பதை சேனாதிபதியிடம் விவரமாகக் கூறினான். அரண்மனை வாசலில் மாணிக்கபுரி மன்னனும் ராணியும் இளவரசி பிரியம்வதையும், ரஜனியும் நின்று உத்தமனை வர வேற்றார்கள்.

மன்னனும் "அம்பிகை அருளால் நீ வெற்றி பெற்றாய்" எனக் கூறி உத்தமனை அரண்மனைக்குள் அழைத்துச் சென்றான். அங்கு எல்லோரும் ராட்சஸ மிருகம் அழிந்த விதத்தை உத்தமன் கூறக் கேட்டு மகிழ்ந்தர்கள்.

அப்போது ராஜகுருவும் "அந்த மிருகம் இறந்ததால் அதிசய மலருக்கு இருந்த சாபமும் போய்விட்டது இனி அதை தாராளமாக நம் அரண் மனைக்குள் கொண்டு வரலாம்" என்றார். அதுகேட்டு அரசகுமாரி "இனி நம் பூங்காவில் அம்மலர்ச் செடிகளை நடுவேன்" எனக் கூறி உள்ளம் பூரித்தாள்.

மன்னனும் "பேஷ்! அதோடு இன்னொரு விலையுயர்ந்ததை நம் அரண்மனையில் வைத்திருக்க வேண் டும். வீரதீரச் செயல்கள் புரிந்த உத்தமனை என் மாப்பிள்ளையாக்கி அரண்மனையில் வைத்துக் கொள்ள நினைக்கிறேன். நீ என்ன நினைக் கிறாய்?" என்று கேட்டான்.

பிரியம்வதை அதற்குச் சம்மதிப் பது போல வெட்கித் தலை குனிந் தாள் ரஜனி அவளது கைகளைப் பிடித்து ஆனந்தக் கண்ணீர் வடித்த வாறே உத்தமனின் கைகளில் வைத்து மகிழ்ந்தாள்.

மன்னனும் ஒரு சுபமுகூர்த்தத்தில் பிரியம்வதைக்கும் உத்தமனுக்கும் விமரிசையாக விவாகத்தை நடத்தி வைத்தான்.

**(முடிவுற்றது)**






# ஏன் போகவில்லை?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் ஏன் இப்படி ஒரு வேலையைச் செய்கிறேன் என்று சற்று யோசித்துப் பார்த்தாயா? உணர்ச்சி வசப்பட்டு உனக்குக் கிடைக்கப்போகும் நல்வாய்ப்பைக் கை நழுவவிட்டுவிடப் போகிறாயா? இதற்கு உதாரணம் பாலகிருஷ்ணன். அவன் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

வெகு காலத்திற்கு முன் சந்திரபுரியின் இளவரசி சந்திரலேகா தன் தோழிகளுடன் உல்லாசப் பயணமாகக் கிளம்பினாள். அவள் அமர்ந்

## வேதாளம் சொல்லும் கதை



திருந்த ரதம் ஒரு காட்டு வழியே செல்கையில் பல விதப் பட்சிகள் கத்துவது கேட்டு மகிழ்ந்து கொண்டிருந்தாள்.

அப்போது இனிய குழலோசை அவள் காதில் விழுந்தது. உடனே அவள் தன் ரதத்தை நிறுத்தி கீழே இறங்கி அந்த இன்னிசை வந்த இடத்தை நோக்கிச் சென்றாள். அவள் பின்னால் தோழிகளும் சென்றனர். அவர்கள் ஒரு மரத்தடியே இருபத்தைந்து வயதுள்ள ஒரு வாலிபனைக் கண்டார்கள்.

அவன் தன்னை மறந்து குழலை இசைத்துக் கொண்டிருந்தான். சந்திரலேகாவும் அவளது தோழிகளும் சத்தம் செய்யாமல் அவனருகே நின்றனர். சற்று நேரமானதும் அந்த வாலிபன் தான் இசைப்பதை நிறுத்திப் புல்லாங் குழலைக் கீழே வைத்தான்.

அப்போது இளவரசி கைதட்டி அவனைப் பாராட்டி "உன் வாசிப்பு என்னைப் பெரிதும் கவர்ந்து விட்டது. உன் பெயர் என்ன?" என்று கேட்டாள். அவனும் "என் பெயர் பாலகிருஷ்ணன். அதோ தெரியும் கிராமத்தில் வசிப்பவன். ஆடுமாடுகளை மேய்க்க தினமும் இங்கு வருகிறேன்" என்றான். மேலும் அவன் சந்திரலேகாவை வைத்த கண் வாங்காமல் பார்த்தவாறு நின்றான்.

சந்திரலேகாவும் "பாலகிருஷ்ணா! நான் இந்நாட்டு இளவரசி சந்திரலேகா. உன் இசை எனக்குப் பிடித்துப் போயிற்று. நீ என் அரண்மனைக்கு வா. உனக்கு இருக்க எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கிறேன். உனக்கு மாத சம்பளமாகக் கணிசமான தொகையும் கிடைக்கும். நீ தினமும் மாலையில் உன் இசையால் எங்களை மகிழ்விக்க வேண்டும். இதுபற்றி நீ யோசித்து ஒரு முடிவிற்கு வா" என்று கூறி ஒரு வைரமாலையை எடுத்துப் பரிசாகக் கொடுத்து விட்டுப் போனாள்.

பாலகிருஷ்ணன் மாலையானதும் மாடுகளை ஓட்டிக் கொண்டு தன் ஊரை அடைந்தான். அவனுக்கு அன்றிரவு தூக்கமே வரவில்லை. அவன் சந்திரலேகா கூறியது பற்

றியே யோசித்துக் கொண்டிருந்தான். யோசித்து முடிவில் அவன் தன் கிராமத்தை விட்டு அரண்மனைக்குப் போய் விடுவது என்று தீர்மானித்துக் கொண்டான்.

தன் கிழத் தந்தையை அழைத்துக் கொண்டு அவன் அரண்மனையை அடையவே அவனை சந்திரலேகா மகிழ்ச்சியுடன் வரவேற்றாள். அவனுக்குத் தனியாக ஒரு மாளிகையை அமர்த்திக் கொடுத்தாள். எல்லா வசதிகளும் பெற்ற பாலகிருஷ்ணனின் வாழ்க்கை முறையே முற்றிலும் மாறி விட்டது. இளவரசி விரும்பும் போது குழல் இசைப்பது அவன் வேலை. அதற்கு மாத ஊதியம் ஆயிரம் வராகன்கள்.

இப்படி இருக்கையில் நீலகண்டன் என்பவன் ஒருநாள் மன்னனைக் காண வந்தான். அவன் தான் ஒரு புல்லாங்குழல் வித்வான் எனக் கூறவே அப்போது தர்பாரில் இருந்த சந்திரலேகா அவனை குழலை இசைக்கச் சொன்னாள். அவனும் ஒருமணி நேரம் குழலில் இசைக்க யாவரும் மெய் மறந்து கேட்டு முடிவில் கைதட்டிப் பாராட்டினார்கள். மன்னனும் அவனுக்குப் பல விலையுயர்ந்த பரிசுகளை அளித்தான்.

நீலகண்டனின் குழலிசையைக் கேட்டபின் சந்திரலேகாவிற்கு பாலகிருஷ்ணனின் குழலிசை மிகச் சாதாரணமானதாகப் பட்டது. அவள் தன் தந்தையிடம் கூறி நீலகண்டனை ஆஸ்தான வித்வானாக நியமிக்கச் செய்தாள். நீலகண்டனின் மதிப்பு





உயரவே பாலகிருஷ்ணனுக்குக் கிடைத்து வந்த ஆதரவு குறைந்து போயிற்று. சந்திரலேகா பாலகிருஷ்ணனின் இசையைக் கேட்கும் வழக்கத்தை விட்டுவிட்டாள்.

ஒருநாள் இந்திரபுரி இளவரசி இந்துமதி சந்திரபுரி இளவரசி சந்திரலேகாவைக் காண வந்தாள். அவள் சந்திரலேகாவின் சிற்றப்பாவின் மகள். அவள் தன்னோடு ஒரு கிளியையும் கொண்டு வந்திருந்தாள்.

அவள் அக்கிளியைச் சந்திரலேகாவிற்குக் காட்டி "அக்கா! இந்தக் கிளி பேசுவதோடு பாடவும் பாடும்" என்று கூறி அதனை புகழ்ந்து கூறினாள். சந்திலேகாவும் அதனைப் பார்க்கவே அது நன்றாகப் பேசி ஒரு பாட்டும் பாடியது.

அது கண்டு சந்திரலேகா ஒரேயடியாக மகிழ்ந்து போய் "அடேயப்பா! உன் கிளி எவ்வளவு அழகாகப் பாடுகிறது!" என்றாள். அவர்கள் இருவரும் வெகுநேரம் பேசி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள். அன்று மாலை மனம் மகிழ சந்திரலேகா பாலகிருஷ்ணனின் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தாள். ஏனெனில் அன்று நீலகண்டன் எங்கோ சென்றிருந்தான். எனவேதான் பாலகிருஷ்ணனுக்கு அந்த வாய்ப்பு கிடைத்தது.

பாலகிருஷ்ணனின் இசை இந்துமதியை மிகவும் கவர்ந்தது. அப்போது அவள் சந்திரலேகாவிடம் "உங்கள் தர்பாரில்தான் இன்னொரு சங்கீத வித்வான் இருக்கிறாரே! இவரை என்னோடு அனுப்பி விடு. அங்கு நான் இவரது இசையைக் கேட்டு மகிழ்ந்து கொண்டிருப்பேன்" என்றாள்.

சந்திரலேகாவும் "ஆகா! தாராளமாக அனுப்புகிறேன். அதற்கு பதிலாக நீ உன் கிளியை எனக்குக் கொடுத்து விட்டுப் போக வேண்டும்" என்றாள். இந்துமதியும் "ஆகா! கொடுக்கிறேன். எனக்கும் இது பேசுவதைக் கேட்டுக் கேட்டு அலுத்துப் போய்விட்டது" என்றாள்.

அவர்கள் பேசுவதையெல்லாம் மௌனமாக இருந்து பாலகிருஷ்ணன் கேட்டுக் கொண்டிருந்தான். சந்திரலேகா அவனிடம் "நீ நாளை புறப்

படத் தயாராக இரு" என்றபோது அவன் "மன்னிக்க வேண்டும் இளவரசி! நான் நாளையே என் கிராமத்திற்குப் போய் விடப் போகிறேன்" என்றான்.

அப்போது இந்துமதி "நீ என் நாட்டில் குறைந்த சம்பளம் கிடைக்கும் என்றா நினைக்கிறாய்? நான் உனக்கு இங்கு கொடுப்பதை விட மூன்று பங்கு அதிகச் சம்பளம் கொடுக்கிறேன். நீ விரும்பும் வசதிகளை எல்லாம் செய்து கொடுக்கிறேன். உனக்கு அங்கு ஒரு குறையும் இராது. இப்போது திருப்தி தானே" என்று கேட்டாள்.

பாலகிருஷ்ணனும் "என்னை மன்னித்து விடுங்கள். லட்ச லட்சமாகக் கொடுப்பதாக இருந்தாலும் நான் என் முடிவை மாற்றிக் கொள்ளப் போவதில்லை. என் கிராமத்திற்குப் போகத்தான் போகிறேன்" என்றான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "மன்னனே! இந்திரபுரி இளவரசி இந்துமதி பாலகிருஷ்ணனுக்கு நல்லதொரு வாய்ப்பை அளித்தாளே. அவன் அதனை ஏற்காதது அறிவீனமான செயல்தானே. அவனுக்கு நீலகண்டனுக்கு கிடைத்த பதவி கண்டு பொறாமை ஏற்பட்டது எனலாமா? இளவரசி சந்திரலேகா கூறியபடி அவன் நடக்காதது அவன் செய்நன்றி மறந்ததைத்தானே காட்டுகிறது! அவன் தனக்கு தர்பாரில் இடமும் கிடைக்காமல், தான் நீலகண்டனை விடத் தாழ்வாக நடத்தப்படுவதாக எண்ணிப் பொறாமை கொண்டே



இந்திரபுரிக்குச் செல்ல மறுத்தானா? இதனால் அவனை செய்நன்றி மறந்தவன், அறிவற்றவன், பொறாமைக்காரன் என்றெல்லாம் கூறலாமா? எனது இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "நீ சொன்ன காரணங்களால் பாலகிருஷ்ணன் தனக்குக் கிடைத்த அரிய வாய்ப்பை உதறித் தள்ளி விடவில்லை. அவன் தன் ஊருக்குப் போக முடிவு செய்தது மிகவும் சரியே. சந்திரலேகா அவனிடம் ஒரு வார்த்தை கூடக் கேளாமல் அவனை இந்துமதியோடு அனுப்புவதாகக் கூறினாள். இது வெகுவாக பாலகிருஷ்ணனின் மனதைப் புண்படுத்தி விட்டது. ஏதோ அடிமை வியாபாரம் போல தன்னை இந்துமதியிடம் ஒப்படைத்து அதற்கு பதிலாக சந்திரலேகா அவளது கிளியை வாங்கிக் கொண்டது அவன் மனதை உறுத்தியது. ஏற்கனவே நீலகண்டன் தர்பாருக்கு வந்தபின் தான் புறக்கணிக்கப்படுவதாக எண்ணிய அவனுக்கு சந்திரலேகாவின் இந்த செயல் அவன் தன்மானத்தைப் பெரிதும் பாதித்தது. ஒரு கலைஞன் தன் கலையைத்தான் தன் செல்வமாகக் கருதுவான். அதை ரசிப்பவர்களைக் கண்டு மகிழ்வான். கலையை வியாபாரப் பொருளாக்கி பேரம் பேசினால் அதுகண்டு அவன் மனம் கொதிக்கும். இரு அரசகுமாரிகளும் அவ்வாறு பேசி முடிவு எடுத்ததை அவன் விரும்பவில்லை. அதனால் அவன் அரசகுமாரிகளிடையே இருக்க விரும்பாமல் தன் கிராமத்திற்கே போய் விடத் தீர்மானித்தான். இது சரியான முடிவே" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# கர்வம் போயிற்று

கொடுமுடியிலிருந்து சிறு வயதில் ஓடிப்போன கோவிந்தன் காசிக்குப் போய் வேத அத்தியாயனம் செய்து விட்டுப் பெரியவனானதும் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். அதனால் அவனை அவ்வூரார் காசி பண்டிதர் என்று அழைக்கலானார்கள். இப்படிப் பெயர் பெறவே கோவிந்தனுக்கு கர்வம் தலைக்கு ஏறிவிட்டது.

ஒருமுறை அவன் தன் தங்கையின் ஊரான கொடியூருக்குச் சென்றான். அன்றிரவு அவ்வூர் கோவிலில் சீதா கல்யாணம் என்ற பொம்மலாட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவன் தங்கை கோவிந்தனிடம் "இந்த பொம்மலாட்டத்திற்கு வசனங்களையும் பாட்டுக்களையும் உன் அத்தான் தான் எழுதியிருக்கிறார். நீ அதைக் கேட்டு மகிழ்ந்தால் அவர் மனம் சந்தோஷப்படும்" என்றாள். கோவிந்தனும் அந்த பொம்மலாட்டத்தைக் காணச் சென்றான்.

கோவிந்தனை வரவேற்று முதலில் சில வார்த்தைகள் கூறப்பட்டன. ஏதாவது குற்றம் குறை இருந்தால் பண்டிதரான கோவிந்தன் மன்னிக்க வேண்டும் என்றும் வேண்டப்பட்டது.

அப்போது கோவிந்தன் "நீங்களெல்லாம் கூழுக்காக இந்தக் கூத்தை நடத்துகிறீர்கள். ஆனால் என் அத்தான் எழுதிக் கொடுத்ததால் பேரும் புகழும் கிடைத்து வருகிறது. என் அத்தான் மீது கொண்டுள்ள மரியாதையால்தான் இங்கு வந்தேன். இதில் மாற்றங்கள் திருத்தங்கள் என்று ஏதாவது செய்ய வேண்டியிருக்கும். அவற்றைப் பிறகு சொல்கிறேன்" என்றான்.

ஆட்டம் ஆரம்பமாகியது. தசரதன் புத்திர காமேஷ்டியாகம் செய்யும்

- சேது ரவி -

காட்சி நடந்து கொண்டிருந்தது. அதில் தசரத மன்னன் இருபத்தோரு வகை மரங்களைக் கொண்டு யூபஸ் தம்பங்கள் நட்டான் எனறு கூறப் பட்டது.

அது கேட்டு சட்டென கோவிந் தன் எழுந்து "என்ன? யாகசாலையில் இருப்பதோரு ரக மரக் கம்பங்களா? அவற்றின் பெயர்களை கூற முடி யுமா? அம்மரங்களில் பத்து வகை களின் பெயர்களாவது சொல்ல முடியுமா?" என்று கேட்டான். அது கேட்டு ஆட்டத்தை நடத்தும் நிர்வா கிக்குக் கோபம் வந்தது.

அவர் "ஐயா! நாங்கள் கூழுக்காக ஆடும் கூத்தாடிகள். எதையும் சற்று மிகைப்படுத்தியே கூறுவோம். அத னால் அதிகம் படிக்காத எங்களுக்கு இருபத்தோரு வகை மரங்களின் பெயர்கள் எல்லாம் தெரியாதுதான். நீங்கள் அவற்றைக் கூறினால் அவற் றைத் தெரிந்து கொண்டு அடுத்த ஆட்ட முதல் அவற்றைக் கூறுகி றோம். இப்போது அப்பெயர்களைச் சொல்வீர்களா?" என்று கேட்டார்.

கோவிந்தன் திக்கு முக்காடிப் போனான். அவனால் உடனே எல்லா ரகப் பெயர்களையும் அப் போது கூற முடியவில்லை. அதி லிருந்து தப்ப யோசிக்கலானான்.

அப்போது அவனது அத்தான் எழுந்து "இவர் மகா பண்டிதர். என்னிடம் அந்தப் பெயர்களை சொல்லி இருக்கிறார். அவற்றை எழுதி உங்களிடமும் கொடுத்திருக் கிறேன். எனவே பெயர்களைச் சொல்லுமாறு இவரை வற்புறுத்த வேண்டாம். நான் எழுதிக் கொடுத்த பெயர்களை நீங்கள் சொன்னால் இவர் திருப்தி அடைவார். உங் களைப் பரீட்சிக்கத்தான் இவ்வாறு கேட்டார்" என்றார். நிர்வாகியும் மரங்களின் பெயர்களைக் கூறவே எல்லோரும் கை தட்டிப் பாராட்டி னர்கள்.

கோவிந்தன் தன் மானம் பிழைத் ததே என்று எண்ணித் தன் கர்வத்தை அன்றே விட்டொழித்தான்.



# அம்புலிமாமா அனுபந்தம் - 66

நம் நாட்டு மரங்கள் :



## மாமரம்

ஏப்ரல் மாதத்திலிருந்து ஆகஸ்ட் வரை நம் நாட்டில் மாம்பழப் பருவக்காலம் உள்ளது எனலாம். டில்லி, பம்பாய் போன்ற நகரங்களில் பெரிய மாம்பழச் சந்தைகளே கூடுகின்றன. மாம்பழங்களில் சுமார் ஐநூறு வகைகள் உள்ளன. மல் கோவா, பங்கனப்பள்ளி, சுவர்ண ரேகா, சேலம் குண்டு, நீலம், மஞ்சநாரி, வாங்க்ரா, சௌசா, துஷேரி என்று பல ரகங்கள்.

மகாராஷ்டிரத்தில் பெயர்பெற்ற ரகம் அலபான்சோ எனப்படுவது. குலாப்கான் வங்கத்தில் பெயர் பெற்ற ரகம். சேலம் குண்டு மாம்பழம் மிகப் பெரிது. கனமானதும் கூட. அதுபோல ஆந்திரத்தில் ராராஜு என்ற வகை உள்ளது.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த லின்னே என்ற தாவர ஆராய்ச்சியாளர் நம் தேச மாவினத்தை 'மாங்கிபேரா இண்டிகா' எனக் குறிப்பிட்டார்.

மாமரங்கள் பெரிய பெரிய கிளைகளுடன் ஐம்பதடி உயரம் வரை வளரக் கூடியவை. இதன் இலைகள் 6 செ.மீ. அகலமும் 15 செ.மீ. நீளமும் இருக்கும். சிறு சிறு பூக்கள் கொத்துக் கொத்தாகப் பூக்கும். பழத்துள் கொட்டையும் அதற்கு மேல் சதைப்பற்றும் அதை மூடித்தோலும் கொண்டு பார்க்க மனித இதயத்தின் வடிவில் மாம்பழம் இருக்கும் 14வது நூற்றாண்டுக் கவி அமீர்குஸ்ரோ இதை 'ராஜ பழம்' என வர்ணித்தார். இராமாயணம் மகாபாரதம் ஆகியவற்றில் இப்பழங்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளது.



# புகழ்பெற்ற மத நூல்கள்

(உலகில் ஒவ்வொரு மதத்திற்கும் ஒரு நூல் அடிப்படையாக உள்ளது. சில மதங்களுக்குப் பல நூல்கள் அடிப்படையாக உள்ளன. ஒவ்வொரு மதத்தின் அடிப்படை நூல் பற்றி சுருக்கமாக கொடுக்கப்படுகிறது))

## வேதங்கள்

"இந்திய சிந்தனை ரிக்வேதத்தால் வானளாவும் உயர் சிகரத்தை எட்டியுள்ளது. ரிக் வேதம் நம் நாட்டில் மட்டுமல்ல, உலகிலேயே மிகப் பழமையான நூல். மனித வளர்ச்சியின் பரிமாணத்தை இது எடுத்துக் காட்டுகிறது" என மேதை டாக்டர் ராதா குமத முகர்ஜி கூறியுள்ளார்.

பழங்காலத்திலிருந்து உலகின் பல பகுதிகளில் பல நாகரீகங்கள் தோன்றின. ஆனால் சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய வேதகாலம் நம் நாட்டு நாகரிகத்தை தனக்கு நிகரில்லாததாகச் செய்து மிளிர்ந்துள்ளது.

வேதம் என்றால் அறிவு எனப் பொருளாம். பழங்கால முனிவர்கள் தியானத்தில் மூழ்கி இருந்தபோது அவர்கள் மனதில் தோன்றிய எண்ணங்களையே வேத சுலோகங்களாகக் கூறினார்கள். அதனால் தான் இவற்றிற்கு சுருதிகள் (கேட்கப்பட்டவை) எனப் பெயர் வந்தது. வேதங்கள் நான்கு வகைப்படும். இவை பழைய சம்ஸ்கிருத மொழியில் உள்ளன.



வெகுகாலம் வரை வேதங்கள் எழுத்து வடிவம் பெற்றிருக்க வில்லை. ஆசிரியர்கள் கூற,

மாணாக்கர்கள் கேட்டு அவற்றை மனப்பாடம் செய்து வந்தார்கள். இது முறைப்படி நடந்தது. மிகவும் அக்கரையுடன் கிரமப்படி நடந்தது. மிகவும் அக்கரையுடன் சிரமப்பட்டு இவ்வாறு பயிற்சி பெறப்பட்டது. வேத மந்திரங்கள் காற்று, ஒளி, மழை முதலிய இயற்கைச் சக்திகளின் தேவதை களான வாயு, அக்கினி, வருணன் முதலியவர்களுக்கு நன்றி செலுத்தும் தோத்திரங்களாக உள்ளன. உலக சிருஷ்டியிலேயே உயர்ந்தவனான மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளை இவை போதிக்கின்றன.

வாழ்க்கை என்றால் என்ன? அதன் உட்பொருள் என்ன? மனிதன் ஏன் பிறக்கிறான்? ஏன் இறக்கிறான்? இறந்தபின் ஆத்மாவின் நிலை என்ன? தேவதைகள் யார்? உண்மை என்பது என்ன? இத்தகைய சிக்கலான அடிப்படையான தத்துவக் கேள்விகளுக்கு வேத சூத்திரங்களில் மறை பொருளாக விடைகள் கூறப்பட்டுள்ளன.

இவற்றிற்கு விளக்கங்களை ரிஷிகளால் தான் கூற முடியும். உண்மையிலேயே கற்றுணர வேண்டும் என முயலும் மாணவர்களுக்கு இவற்றின் பொருள் விளங்குகிறது.

ஹிந்து மதம் எனப் படிப்படியாக உயர்ந்து நிலை பெற்றதற்கு வேதங் களே அடிப்படை நூல்களாகும்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. இந்துப் புராணங்களின்படி முதலில் இறந்த மனிதன் யார்?
2. ரஷ்ய-ஜப்பான் போரை நிறுத்த முயன்ற ஒரு அமெரிக்க அதிபர் நோபல் பரிசு பெற்றார். அவர் யார்?
3. பிலிப்பைன் எவ்வளவு தீவுகளைக் கொண்ட நாடு?
4. இங்கிலாந்தை நீண்ட காலம் ஆண்டவர் யார்? எவ்வளவு ஆண்டுகள்?
5. பம்பாயில் 'கேட் வே ஆப் இண்டியா' யாருக்கு மரியாதை காட்டக் கட்டப்பட்டது?
6. அமெரிக்காவின் மிகப்பழைய பல்கலைக் கழகம் எது?
7. பிளாஸ்டிக்கைக் கண்டு பிடித்தவர் யார்?
8. துருக்கியின் முந்தைய தலைநகர் எது?
9. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு ஆசிய நாட்டின் பெயர் ஆராம். அதன் தற்போதைய பெயர் என்ன?
10. ஆப்பிரிக்காவில் மிகப் பெரிய ஏரி எது?
11. முந்தைய பாபிலோன், எகிப்தில் வங்கி முறை இருந்தது. தற்போதைய வங்கி முறை எங்கு தொடங்கியது?
12. முதன் முதலில் கிருஸ்துவ மதத்தைத் தழுவிய ரோமானிய சக்கரவர்த்தி யார்?
13. விண்வெளிக் கப்பலில் சென்று அதிலிருந்து வெளிவந்து வானவீதியில் நடந்த முதல் மனிதர் யார்?
14. சண்டிகட் நகரை உருவாக்கிய சிற்பி யார்?
15. இப்போதைய இண்டஸ் நதியின் சம்ஸ்கிருதப் பெயர் என்ன?

# விடைகள்

1. யமன்
2. தியோடர் ரூஸ்வெல்ட்
3. ஏழாயிரம் தீவுகள்
4. விக்டோரியா ராணி, 63 ஆண்டுகள்
5. ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்
6. ஹார்வர்ட் பல்கலைக்கழகம்
7. அலெக்சாண்டர் ஷார்ப்
8. இஸ்டான்புல்
9. சிரியா
10. விக்டோரியா ஏரி
11. இத்தாலி
12. கான்ஸ்டன்டைன் சக்கரவர்த்தி
13. அலெக்ஸி லியோனாவ் 1965-ல்
14. பிரஞ்சு நிபுணர் லே கார்பாசியர்
15. சிந்துநதி



# உழவுக்கு வந்தனை செய்

பரமசிவம் பல தொழில்களைக் கற்றபோதிலும் விவசாயமே செய்து வரலானான். அதற்கு வேண்டிய நிலபுலன்களை அவனது தந்தை விட்டுப் போயிருந்தார்.

ஒருநாள் பரமசிவத்திற்குக் கல்வி கற்பித்த குரு அவனைப் பார்க்க வந்து அவன் நன்கு விவசாயம் செய்வது கண்டு மகிழ்ந்து போனார். ஆனால் பரமசிவமோ "குருவே! நான் உங்களிடம் கற்ற பல தொழில்கள் வீணாகின்றனவே. அவற்றைப் பயன்படுத்தி வேறு தொழில்களைச் செய்யலாம் என்று நினைக்கிறேன். எனக்கு இந்த விவசாயம் பிடிக்கவில்லை" என்று கேட்டான்.

குருவும் சிரித்தவாறே " உனக்கு ஞாபகமறதி அதிகம். அதனால் உன்னை எல்லோரும் ஏமாற்றிவிடுவார்கள். எனவே உனக்கு ஏற்ற தொழில் விவசாயம்தான்" என்றார்.

பரமசிவமோ " எனக்கு ஞாபக சக்தி அதிகமென்றால் நீங்கள் கற்றுக் கொடுத்ததெல்லாம் நினைவில் இருக்கிறதே" என்றான்.

குருவும் "அப்படியா! நான் எல்லாத் தொழில்களையும் குறித்து ஒரு புத்தகம் கொடுத்தேனே, அதைக் கொண்டு வா" என்றார். பரமசிவமும் "அதை நான் என் நண்பன் ஒருவனிடம் கொடுத்தேன். திருப்பித் தருவதாகச் சொல்லி இருக்கிறான்" என்றான்.

குருவும் "சரிதான் போ! இனி உனக்கு அது எங்கே கிடைக்கப் போகிறது? புத்தகமோ பணமோ, பெண்ணோ வேறொருவரிடம் போய் விட்டால் திரும்பி வரவே வராது. இது தெரியாதா உனக்கு?" என்று கேட்டார்.

பரமசிவமும் "இதுவும் தெரியும் கொடுத்ததைத் திரும்ப வாங்கும்

- அருணா சுவாமி -



சாமர்த்தியமும் எனக்கு உண்டு" என்று கர்வத்தோடு கூறினான்.

குருவும் "அப்படியா! நான் இன்னமும் நான்கு நாட்களுக்குப் பிறகு வருகிறேன். அதற்குள் நான் கொடுத்த புத்தகத்தை வாங்கி வை" எனக் கூறிவிட்டுச் சென்றார்.

பரமசிவம் தன் நண்பனான கண்ணன் என்பவனிடம் போய் "என் குரு கொடுத்தது என்று ஒரு புத்தகத்தை நான் உன்னிடம் கொடுத்தேனே. அதைக் கொடு. இப்போது எனக்கு அது தேவைப்படுகிறது" என்றான்.

கண்ணனோ "'நீ என்னிடம் எந்தப் புத்தகமும் கொடுத்ததாக நினைவில்லையே. நீயோ என்னிடம் கொடுத்ததாக கூறுகிறாய். அப்படி நீ கொடுத்திருந்தால் அது இங்குதான் இருக்கும். வேறு எங்கும் போய் விடாது. இன்று தேடிப்பார்க்கிறேன். இருந்தால் எடுத்து வைக்கிறேன் நாளை வந்து பார்" என்றான். மறுநாள் பரமசிவன் கண்ணன் வீட்டிற்குப் போனபோது அவன் "என் வீட்டில் உன் புத்தகம் இல்லை எவ்வளவு தேடியும் கிடைக்கவில்லை" என்றான்.

பரமசிவமும் "இன்னொரு தடவை நன்றாக தேடிப்பார். உன்னிடம்தான் கொடுத்தேன். நன்றாக நினைவில் இருக்கிறது. அதில் ஒரு புதையல் பற்றிய ரகசியமும் இருக்கிறது" என்றான். அதைக் கண்ணனின் மனைவி கேட்டுக் கொண்டிருந்தாள். அதனால் பரமசிவம் போனதும் அவள் "அதில் புதையல் பற்றிய இரகசியம் இருக்கிறதாமே. அப்படியானால் அதைத் தேடி எடுத்து அந்த ரகசியத்தைப் படித்துக் தெரிந்து கொண்டு விட்டுப் புத்தகத்தைக் கொடுக்கலாம்" என்று கூறி கண்ணனோடு சேர்ந்து அவளும் தேடிப்பார்த்தாள். ஆனால் கிடைக்கவில்லை.

மறுநாள் வந்த பரமசிவம் இனி அவர்களை நம்பிப் பயனில்லை என்று கண்டு அவர்கள் வீட்டு வேலைக்காரியைத் தனியே அழைத்துப் போய் ஏதோ ரசசியமாகச் சொல்லிவிட்டுப் போனான்.

அதன்படி கண்ணன் வீட்டில் இல்லாதபோது அவன் மனைவி யிடம் அந் வேலைக்காரி "அம்மா! நீங்கள் ஏதோ புத்தகத்தைத் தேடுகிறீர் களே. அதை நம்ப ஐயா புளியந் தோப்பிலுள்ள முத்தம்மாவிடம் கொடுத்து வைத்திருக்கிறார். அதை அவளிடமிருந்து வாங்கிப் பரம சிவத்திடம் கொடுங்கள். புதையலில் பாதி கிடைக்கும்" என்றாள்.

முத்தம்மா மந்திரக்காரி. தாயத் துக் கட்டுபவள். வேப்பிலைக் குழை அடிப்பவள். கண்ணைன் வந்ததும் அவன் மனைவி "புத்தகத்தை முத்தம் மாவிடம் கொடுத்து வைத்திருக் கிறீர்களாமே. எனக்குத் தெரியாமல் இப்படி ஒரு வேலையா?" என்று கேட்டாள்.

கண்ணனோ தனக்கு ஒன்றும் தெரியாது என்று சொல்லியும் அவன் மனைவி சமாதானப்படவில்லை. அதனால் கண்ணன் பரமசிவத்தின் வீட்டிற்குப் போய் "உன் புத்தகப் பிரச்னை என் குடும்பப் பிரச்னை யாகி விட்டது. நீயே இதைத் தீர்த்து வை" என்று வேண்டினான்.

அப்போது பரமசிவம் கோபத் தோடு "எனக்கு என் புத்தகம் தேவை. உன் பிரச்னை பற்றி எனக்கு என்ன கவலை? நீ மட்டும் இன்று மாலைக் குள் என் புத்தகத்தைக் கொண்டு வந்து கொடுக்காவிட்டால் பயில்வான் மலையப்பனை அனுப்பப் போகி றேன். அவன் வந்தால் உன்னை



என்ன பாடு படுத்துவான் என்று நான் சொல்லித்தான் தெரிய வேண் டுமா? அதனால் மரியாதையாகப் புத்தகத்தை கொண்டு வந்து கொடுத்து விடு" என்று மிரட்டி னான்.

அது கேட்டு கண்ணன் பயந்து போய் அந்த ஊரை விட்டு அடுத்த ஊரிலுள்ள தன் உறவினர் வீட் டிற்குப் போய் விட்டான். இதற்குள் நான்கு நாட்கள் கழிந்தும் விட்டன. பரமசிவத்தின் குருவும் திரும்பி வந்து "எங்கே புத்தகம்?" என்று கேட்டார். பரமசிவமும் "ஐயா! என்ன முயன் றும் அது கிடைக்கவில்லை" என்று கூறினான்.

குருவும் "அன்றே நான் சொன்

னேன். புத்தகமோ, பணமோ, பெண்ணோ ஒருவன் கையை விட்டுப் போய்விட்டால் போனது போனது தான்" என்றேன். அதைக் கூட நீ மறந்து போய்விட்டாய் போலிருக் கிறது" என்றார்.

அப்போது பரமசிவம் "குருவே! நீங்கள் எப்போதும் நான்தான் மறந்து விட்டேன் என்றே கூறுகிறீர்கள். அப்புத்தகத்தில் கூறிய முறைகளைக் கையாண்டு சாம, தான, பேத, தண் டம் என்ற நான்கு வகைகளிலும் முயன்றேனே" என்று தான் செய்த முயற்சிகளை எல்லாம் கூறினான்.

குருவும் "அவற்றால் ஏதாவது பயன் ஏற்பட்டதா? இப்படித்தான் நீ வேறு எந்த தொழில் செய்தாலும் இருக்கும்" என்றார். அப்போது பரமசிவம் "அப்படியானால் தவறு என் மீது இல்லை. அப்புத்தகத்தில் கூறப்பட்ட முறைகள்தான் தவறா னவை" என்று உறுமினான்.

அது கேட்டு குரு சிரித்து "இந்த நான்கு நாட்களாக நான் வேறு ஊரில் இருந்தேன். அவ்வூரார் என் முறைகளால் பயனடைந்து எனக்குப் பண முடிப்பு அளித்து கௌரவித் தார்கள். நீ ஞாபகமறதி கொண்டு கையாலாகாதவனாக இருக்கிறாய் என்பது நன்கு தெரிகிறதே" என்றார்.

பரமசிவம் "அது எப்படி?" எனவே அவரும் "எந்தப் புத்தகத் தால் நீ பயனடையவில்லையோ அந்த புத்தகத்தால் அவ்வூரில் உள்ள உன் நண்பன் கந்தன் என்பவன் பயனடைந்தான். நீ கந்தனிடம் புத்த கத்தைக் கொடுத்ததை மறந்து விட்டுக் கண்ணனிடம் போய் அதைக் கேட் டால் எப்படிக் கிடைக்கும்?" என்று சற்றுக் கடுமையாகக் கேட்டார்.

அது கேட்டு பரமசிவம் வெட் கத்தால் தலை குனிந்து கொண்டான். அவன் குருவிடமும் கண்ணனிடமும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு முன் போல விவசாயமே செய்து வரலா னான்.





# குருட்டு யோசனை!

பொன்னுசாமி சாப்பிட்டு விட்டுத் திண்ணையில் உட்கார்ந்து ஏதேதோ இல்லாத யோசனைகள் செய்து கொண்டே இருப்பான். இப்படி ஒரு நாள் அவன் இருக்கையில் அவன் முன்பின் அறியாத ஒருவன் அவன் வீட்டிற்கு வந்தான். அவனைப் பார்த்தாலே வெகு தூரத்திலிருந்து சிரமப்பட்டு வந்தவன் போலத் தென்பட்டது.

அவன் பொன்னுசாமியைப் பார்த்து "ஐயா! இதுதானே பொன்னுசாமியின் வீடு?" என்று கேட்டான். பொன்னுசாமியோ சற்று வேடிக்கை பார்க்க விரும்பி "இல்லை. இங்கே பொன்னுசாமி என்று யாரும் இல்லை. அவன் வீடு இவ்வூர் சிவன் கோவிலின் வடக்கே இருக்கிறது. அங்கே போய்ப் பார்" என்று கூறினான்.

அந்த மனிதனும் திகைத்தவாறே "அப்படியா!" என்று கூறியவாறே மெதுவாகச் சென்றான். அங்கு போய் விட்டுத் திரும்பி மறுபடியும் பொன்னுசாமியின் வீட்டிற்கு வந்து "அங்கே விசாரித்ததில் அவர் வீடு இங்கே தான் இருப்பதாகச் சொன்னார்கள் அதனால்தான் திரும்பி வந்தேன். இங்கே எங்கே அவரது வீடு இருக்கிறது? உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்கள்" என்று கூறினான்.

பொன்னுசாமியும் "யாராவது ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பார்கள். இதென்னவோ பொன்னுசாமி வீடல்ல. ஒரு வேளை ஏரிக் கரையின் பக்கம் அவன் இருக்கலாம். அங்கே போய் வேண்டுமானால் விசாரித்துப் பார்" என்றான்.

அந்த ஆளும் பொன்னுசாமி கூறிய ஏரிக் கரைக்குப் போய் விசாரித்தான். அங்குள்ளவர்களும் "இங்கே

- சங்கரசுவாமி -



யாரும் அப்படி இல்லை. ஊருக்குள் ஒருவர் இருக்கிறார்" என்று கூறிப் பழையபடி பொன்னுசாமியின் வீட்டிற்கே அனுப்பினார்கள்.

அந்த ஆள் மறுபடியும் பொன்னுசாமியின் வீட்டிற்கு வந்து நிற்கவே பொன்னுசாமியும் "ஏன் ஏரிக்கரைப் பக்கம் அவன் இல்லையா? நன்றாக விசாரித்தாயா? ஆனால் இது மட்டும் பொன்னுசாமியின் வீடல்ல. நீ யாரோ ஏதோ சொன்னார் என்று இங்கே வந்துவிட்டாயே. ஒரு வேலை செய். சத்திரத்திற்குப் போய் விசாரி. அங்கே யாராவது சொல்வார்கள்" என்று கூறி அனுப்பினான்.

சத்திரத்தில் போய் விசாரித்து விட்டு அந்த ஆள் மறுபடியும் பொன்னுசாமியின் வீட்டிற்கே வந்தான். அவன் "நான் விசாரித்ததில் அங்கே யாரும் இல்லை என்றும் இங்கே எங்கேயோதான் இருப்பதாகவும் கூறினார்கள்" என்றான்.

பொன்னுசாமியும் "இதென்ன வேடிக்கை! நீயும் பல இடங்களுக்குப் போய் விசாரித்துவிட்டு மறுபடியும் மறுபடியும் இங்கேதான் வருகிறாய். ஆனால் இது மட்டும் பொன்னுசாமியின் வீடல்ல. அவன் தன் பழைய வீட்டிலிருந்து மாறி வேறு வீட்டிற்குப் போயிருக்க வேண்டும் அதனால் நீ தெற்கு வீதியில் போய் விசாரித்துப் பார்" என்று கூறி அனுப்பினான்.

அங்கும் போய் விசாரித்து விட்டு மறுபடியும் அந்த ஆள் பொன்னுசாமியின் வீட்டிற்கே திரும்பி வந்து "எங்கே யாரைக் கேட்டாலும் இது தான் பொன்னுசாமியின் வீடு என்கிறார்கள். நீங்களோ இது அவர் வீடு இல்லை என்கிறீர்கள். என்ன செய்வது? ஒரு முக்கியமான தகவலை அவரிடம் சொல்ல வேண்டும். அவர் வீட்டையே கண்டு பிடிக்க முடியவில்லையே. என்ன செய்வேன்?" என்று கூறிக் கொண்டே நின்றான்.

அப்போது பொன்னுசாமி "முக்கியமான தகவலா? என்ன அது? நான் என்னவோ யோசனையில் இது பொன்னுசாமியின் வீடல்ல என்று சொல்லிவிட்டேன். நான்

தான் பொன்னுசாமி. இது என் வீடு தான்" என்றான்.

அதைக் கேட்ட அந்த ஆள் தான் கேட்பது உண்மைதானா, தன் எதிரே உள்ளவன் புத்திசுவாதீனத்தோடு இருக்கிறானா என்று சந்தேகப்பட்டு அவனை ஏற இறங்கப் பார்த்தான்.

அவனும் "நான் தானப்பா பொன்னுசாமி. நீ சந்தேகப்பட வேண்டாம். என்ன சமாசாரம் செல்ல வந்தாயே. அதைச் சொல்" என்றான்.

அந்த ஆளும் சற்றுக் கோபத்தோடு "என்னை இப்படி அலைய வைத்தீர்களே. நான் உங்கள் சின்னத் தாத்தா வீட்டு வேலைக்காரன். அவர் நேற்றிரவு இறந்து விட்டார். அவருக்கு மகனோ மகளோ இல்லை. அதனால் இறக்குமுன் அவர் "என் உறவினர்களில் யார் முதலில் வந்து என் உடலுக்கு தகனக் கிரியைகள் செய்கிறாரோ அவருக்குத்தான் என் சொத்து முழுவதும்" என்று கூறி விட்டு இறந்தார். நாங்கள் மூன்று வேலைக்காரர்கள் அவரது சொந்தக்காரர்களிடம் சொல்லக் கிளம்பினோம். சொத்தை அடைபவர் எங்களுக்கு ஏதாவது இனாம் கொடுக்கத்தானே கொடுப்பார். இந்த ஆசையில் நான் வந்தேன். ஆனால் இங்கு நான் வந்து அலைந்து திரிந்ததால் தாமதமாகி விட்டது. இதற்குள் அவரது உறவினர் இன்னொருவர் போய்த் தகனக் கிரியைகளைச் செய்து சொத்துகளையும் அடைந்திருப்பார். உங்களால் எனக்கு அலைச்சல் உங்களுக்கும் சொத்து கிடைக்காமல் போய் விட்டது" என்றான்.

அது கேட்டு பொன்னுசாமி "ஐயோ! என் முட்டாள்தனத்தால் வரவேண்டிய சொத்தை இழந்து விட்டேனே. வழக்கம் போல ஏதோ குருட்டு யோசனையில் மூழ்கி உன்னை அலைய வைத்து வேடிக்கை பார்த்துச் சிரிக்க நினைத்தேன். இப்போது என்னைப் பார்த்தே சிரிக்கும் நிலை ஏற்பட்டு விட்டதே" என்று கூறித் தலையில் அடித்துக் கொண்டான்.



# அம்புலிமாமா செய்திகள்

## பெற்றோர்களே! ஜாக்கிரதை!!

ஆரம்பப் பள்ளி மாணவர்கள் படிப்பில் பாதியோடு நின்றால் தண்டனை மாணவர்களுக்கு அல்ல, அவர்களது பெற்றோர்களுக்கே. அது சீனாவின் சட்டம். சீனாவில் உயர்பள்ளிப் படிப்பு வரை இலவசக் கட்டாயக் கல்வி. மாணவன் தன் படிப்பைப் பாதியில் நிறுத்திவிட்டால் அவனது பெற்றோர் 100 ரூபாயிலிருந்து 1,70,000 வரை அபராதம் செலுத்த வேண்டி வரும். மாணவனை அவனது ஆறாவது வயதில் பள்ளியில் சேர்த்து விடவேண்டும். அவன் ஒன்பது ஆண்டுகள் தொடர்ந்து படித்து உயர்நிலை வரை கல்வி பெற்றாக வேண்டும். பெய்ஜிங் நகரில் 99. 98 சதம் மாணவர்கள் பள்ளியில் படிக்கிறார்கள்.

## உயிர்காத்த சேமிப்பு

வட ஜப்பானில் ஒரு வீட்டில் ஒரு திருடன் நுழைந்து அங்கு தனியாக இருந்த பெண்ணைக் கத்தியைக் காட்டி மிரட்டி எல்லாப் பணத்தையும் கொடுக்கச்



சொன்னான். அப்போது அப்பெண்ணின் எட்டு வயது மகன் "அம்மா! இவரை ஒன்றும் செய்யாதே. நாம் சேமித்து வைத்திருக்கும் உண்டியலையே இவரிடம் கொடுத்து விடலாம்" என்று கூறித் தன் உண்டியலை எடுத்து வந்து திருடனிடம் கொடுத்தான். அவன் அதை வாங்கிக் கொண்டு உடனே போய்விட்டான்.

## மிகப் பருமனான உடல்

அமெரிக்காவில் ப்ளோரிடாவின் போர்ட் லாடர்டெல்லில் ஒரு பெண்மணியின் காலில் பலத்த அடிபட்டு உயிருக்கே ஆபத்து என்ற நிலை ஏற்பட்டது. அவரை அவரது வீட்டிலிருந்து ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் செல்ல அவரது வீட்டு வாசலை இடித்து வழியைப் பெரிதாக்க வேண்டியதாயிற்று. ஏனெனில் அவர் மிகப் பருமனானவர். நிறையோ 320 கிலோ கிராம்!

## முப்பது வயது பொம்மை

அமெரிக்கா 1945-ல் ஹிரோஷிமாவையும் நாகசாகியையும் அணுகுண்டால் தாக்கவே இரண்டாவது உலகப் போர் முடிவுக்கு வந்தது. அமெரிக்கப் படை வீரர்களை ஜிஐஸ் எனக் கூறலாயினர். 1964-ல் பொம்மைகள் தயாரிக்கும் ஒரு நிறுவனம் ஜிஐஜோ என்ற பெயரில் ஒரு போர் வீரனின் பொம்மையைத் தயாரித்தது. அந்த பொம்மை குழந்தைகளை கவரவே அந்த நிறுவனத்திற்கு அப் பொம்மைகளை விற்றதில் நல்ல லாபம் கிடைத்தது. இது வரை 2,20,000,000 பொம்மைகள் விற்கப்பட்டுள்ளன. கடந்த பிப்ரவரி 7-ல் அந்த நிறுவனம் அப் பொம்மையின் 30-வது ஆண்டு நிறைவு விழாவை 18 மீட்டர் உயரத்தில் அதே போன்ற பொம்மை செய்து விமரிசையாகக் கொண்டாடியது.






பாண்டவர்கள் கௌரவர்களோடு சதுரங்கம் ஆடித் தோற்று வனவாசம் செய்யச் சென்றனர். ஒருநாள் பீம னும் துரௌபதியும் காட்டில் போய்க் கொண்டிருக்கையில் நறுமணம் மிக்க அழகிய மலர் ஒன்று எங்கிருந்தோ வந்து திரௌபதியின் மீது விழுந்தது. ஆனால் அது கொஞ்சம் நசுங்கிக் கசங்கிப் போயிருந்தது.

அது சௌகந்திகம் என்ற மலர். குபேரனின் பட்டணமான அழகாபுரி யின் அருகே உள்ள மானசரோவ ரோடு ஒட்டிய மற்றொரு ஏரியான தளசரோவரில் தினமும் ஒரு மலராக இந்த மலர் மலர்கிறது. குபேரன் தினமும் புஷ்பக விமானத்தில் ஏறி கைலாசம் போகும் போது தினமும் இந்த மலரைப் பறித்துச் சென்று சிவபிரானுக்கு அர்ப்பணிப்பானாம். பிறகு அந்த மலரைப் பிரசாதமாக எடுத்துக் கொண்டு தன் ஊருக்குத் திரும்புவானாம்.

ஒருநாள் குபேரன் கைலாசத் திற்குப் போய்விட்டு வந்தபோது சௌகந்திக மலர் புஷ்பக விமானத்தி லிருந்து நழுவி விழுந்தது. அது துரௌபதி மீது விழுந்த மலர். அவள் அதை எடுத்து முகர்ந்து "ஆகா! எவ்வளவு அழகிய மண முள்ள மலர்! இது போன்ற மலரைக் கொண்டு வந்து கொடுங்களேன்" என்று பீமனிடம் வேண்டினாள்.

பீமன் தன் கதையைத் தோள்மீது வைத்தவாறே மலரைத் தேடி



இமயமலைக்குச் சென்றான். வழியில் கதலி வனத்தை அவன் கடக்க நேரிட்டது. அப்போது பாதையின் குறுக்கே அனுமாரின் வால் இருக்கவே அது ஒரு குரங்கின் வால் தானே என எண்ணிச் சுற்றிலும் பார்த்தான். சற்று தூரத்தில் அனுமார் அமர்ந்து ராம நாமத்தை ஜெபித்துக் கொண்டிருந்தார். பழுத்த கிழமாக அவர் தென்பட்டார்.

பீமன் பலமாகக் கத்தி "ஏ குரங்கே! உன் வாலைச் சுருட்டு. நான் போக வழி விடு" எனக் கூறினான். அனுமாரும் "அப்பனே! என் வாலை நகர்த்திவிட்டு உன் வழியே போய்க் கொள்" என்றார். பீமனும் அந்த வாலைத் தன் காலால் நகர்த்த முயன்று முடியாமல் போகவே இரு கைகளாலும் தூக்க முயன்றான். அதைத் தூக்கவும் முடியவில்லை.

அப்போது அனுமார் "என்னப்பா! பெரிய வீரன் போல கதையோடு வந்திருக்கிறாய். ஒரு கிழக் குரங்கின் வாலைக் கூட நகர்த்த முடியவில்லையே. உனக்கெல்லாம் கதை எதற்கு?" என்று கேட்டார். அதைக் கேட்ட பீமன் கோபம் கொண்டு அனுமாரைக் கதையால் அடிக்கப் போனான்.

அப்போது அனுமார் சிரித்தவாறே "ஓ! கதாயுத்தம் செய்ய விரும்புகிறாயா? நான் தயார்தான். அதோ கிடக்கிறதே அது என் கதை. அதை நீ எடுத்துக் கொடு பார்க்கலாம்" என்றார். பீமனும் அந்த கதையை எடுக்க முயன்றான். ஆனால் அவனால் அதைத் தூக்கவே முடியவில்லை.

அப்போது அனுமார் "என்ன தம்பீ! வாலையும் நகர்த்த முடியவில்லை. என் கதையையும் எடுத்துக் கொடுக்க முடியவில்லை. என்ன இளைஞனப்பா நீ? ஏதோ உணர்ச்சி வசப்பட்டு அலங்காரமாக கதையைத் தூக்கிக் கொண்டு கிளம்பி வந்து விட்டாயா! யாரோ ஒரு பெண் ஏதோ சொன்னாள் என்பதை நிறைவேற்ற உன் போன்ற வாலிபர்கள் துடிப்பது இயல்பே. நீயும் அப்படித்தான் வந்திருக்கிறாயா?" என்று சிரித்தவாறே கேட்டார்.

பீமனோ கோபத்தோடு "ஏய் குரங்கே! இதென்ன அதிகப்பிரசங்கம். கிழவனாயிற்றே என்று பார்க்கிறேன்" என்றான். அனுமாரும் "இந்த என் கதையைத் தூக்க முடியாத நீ ஏன் கோபம் கொள்கிறாய்? எங்கள் காலத்தில் நாங்கள் கல்லாலான கதைகளை எளிதில் தூக்கி விடுவோம். சரி, சரி. நானே என் கதையை எடுத்துக் கொள்கிறேன். கதை கொண்டு சண்டை போடலாம்" என்று கூறி எழுந்து தன் கதையை எடுத்துக் கொண்டார்.

இருவரும் வெகுநேரம் கதாயுத்தம் புரிந்தனர். பீமனின் கதை அனுமார் அடித்த அடியில் தூரத்தில் போய் விழுந்தது. அந்தப் போரில் பீமன் தனக்கு அனுமார் புதுப்புது பிடிகளையும் தாக்கும் முறைகளையும் சொல்லிக் கொடுப்பது போல உணர்ந்தான்.

அவன் சட்டென கைகளைக் கூப்பி அனுமாரை வணங்கி "மகானுபாவரே! நீங்கள் சாதாரணக் குரங்கல்ல. வாயு புத்திரரான அனுமார் என்று தெரிந்து கொண்டேன். நானும் வாயுதேவரின் மந்திர பலத்தால் குந்தி தேவிக்குப் பிறந்தவன். பீமன் என் பெயர். நான் உங்கள் தம்பி" என்றான்.

அனுமார் பீமனைக் கட்டித் தழுவிக் கொண்டு " ஆம். நாம் இருவரும் வாயுதேவனின் புதல்வர்கள் அண்ணன் தம்பிகளே" என்றார். பீமனும்



"அண்ணா! உங்களது விஸ்வரூபத்தைக் காண ஆசைப்படுகிறேன்" என்றான்.

அனுமாரும் "தம்பீ! இது துவாபர யுகம். உன்னால் என் முழு விஸ்வரூபத்தையும் காண முடியாது. உன் ஆசையை நிறைவேற்ற நான் விஸ்வரூபம் எடுக்கிறேன். உன்னால் எவ்வளவு பார்க்க முடியுமோ அவ்வளவு பார்த்துக் கொள்" என்றார்.

அவரது உருவம் பெரிதாகி ஆகாயம் வரை மேகங்களின் ஊடே சென்றது. பீமனால் சரியாகப் பார்க்கக் கூட முடியவில்லை. அவன் அனுமாரின் விஸ்வரூபத்தை அடக்கிக் கொள்ளும்படி வேண்டினான்.

அனுமாரும் தன் உருவை முன்



போலாக்கிக் கொண்டு "ஆமாம்! நீ எதற்காக இந்தப் பக்கம் வந்தாய்?" என்று கேட்டார். பீமனும் தான் சௌகந்த மலருக்காக வந்ததைக் கூறினான்.

அனுமாரும் "பீமா! தளசரோ வரத்தை கேசிகி என்ற யட்சிணி காவல் காக்கிறாள். அவள் சிவ பக்தை. எனவே அவள் மாயதந்திரங் களில் மயங்கி விடாதே. அப்படி நீ மயங்கும்போது நான் கூறும் ராம நாமம் உன் காதில் ஒலிக்கும். நீ விழித்துக் கொள். மேலும் என் வாலிலிருந்து ஒரு பிடி ரோமங் களைத் தருகிறேன். நீ அதிலிருந்து ஒரு ரோமத்தை அவள் முன் போட் டால் உடனே ஒரு சிவலிங்கம் தோன்றும். அவள் அதனைப் பூசிக்க ஆரம்பிப்பாள். இப்படியே பலமுறை அவளை தடுத்துக் கொண்டே நீ போய் மலரைப் பறித்து வரலாம்" எனக் கூறித் தன் வாலிலிருந்து ஒரு பிடி ரோமம் எடுத்து பீமனுக்குக் கொடுத்தார்.

பீமனும் அவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு தளசரோவரத் திற்குப் போனான். கேசிகி அவனைக் கண்டதும் ஒரு அழகிய பெண்ணாக மாறி அவனை மயக்க முயன்றபோது அவனது காதில் ராமநாமம் ஒலித் தது. உடனே பீமன் விழித்துக் கொண்டு தன்னிடமிருந்த ரோமக் கத்தையில் ஒரு ரோமத்தை எடுத்து அவள் முன் போட்டான்.

அது சிவலிங்கமாகவே கேசிகி அதை வழிபடலானாள். அப்போது பீமன் சரோவரை நோக்கிச் சென் றான். கேசிகி தன்னை அணுகும் போதெல்லாம் அவன் ஒரு ரோமத்தை எடுத்துப் போட்டு சிவலிங்கத்தைத் தோன்றச் செய்து அவளைத் தடுத்து தளசரோவருக்குப் போய் அன்று மலர்ந்திருந்த சௌகந் திக மலரைப் பறித்துக் கொண்டு அனுமார் இருக்கும் கதலி வனத்தை அடைந்தான்.

அவன் அவரிடம் அந்த மலரைக் காட்டி "தங்கள் தயவால் இதைப் பெற்றேன். இது போல எங்களுக்கும் கௌரவர்களுக்கும் நடக்கப்போகும் பாரதப் போரில் எங்களுக்கு உதவ



வேண்டும்" என்று வேண்டினான்.

அனுமாரும் "பீமா! இனி நான் போர் புரிய மாட்டேன். ஆனால் போரில் உன் தம்பி அர்ஜுனன் ரதத்தில் அமர்ந்து போர் புரியும் போது ரதத்தின் மேல் பறக்கும் கொடியில் இருந்து காக்கிறேன். வெற்றி உங்களுக்குத்தான். நீ சௌகந்த மலரை துரௌபதியிடம் கொடு. இது வாடாமல் இருக்கும் மலர். துரௌபதி இதனால் சிவனைப் பூசித்தபின் பத்திரமாக எடுத்து வைக்கட்டும். அவள் தன் சபதப்படி கூந்தலை முடியும்போது தலையில் வைத்துக் கொள்ளட்டும். உங்களுக்கு சிவனின் அருளும் குபேரனின் அருளும் என்றென்றும் கிடைக்கும்" எனக் கூறி ஆசிர்வதித்து அனுப்பினார்.

பீமனும் அந்த மலரைக் கொண்டு போய் துரௌபதியிடம் கொடுத்து அனுமார் கூறியதை சொன்னான். துரௌபதியும் அம்மலர் கொண்டு சிவனைப் பூசித்து மலரை பத்திரமாக எடுத்து வைத்தாள். பிறகு அவள் பீமனிடம் "நான் இந்த மலர் வேண்டும் என்று கேட்டதால்தானே உங்களால் அந்த மகானுபாவரை தரிசிக்க முடிந்தது?" என்று கேட்டாள். பீமனும் "நீ சொல்வது. சரிதான்" என்று கூறினான்.

பாண்டவர்கள் நிபந்தனைப்படி வனவாசங்களை முடித்து விட்டு துரியோதனனிடம் பாதி நாட்டைக் கேட்டார்கள். ஆனால் அவனோ ஊசி முனை அளவு இடம் கூடக் கொடுக்க முடியாது எனக் கூறவே மகாபாரதப் போர் மூண்டது.

குருக்ஷேத்திர மைதானத்தில் இரு தரப்புப் படைகளும் அணிவகுத்து நின்றன. அர்ஜுனன் ரதத்தில் ஏறிவர கிருஷ்ணர் அதனை ஓட்டிப் பார்த்த சாரதி என்ற பெயர் பெற்றார். அந்த ரதத்தின் மீது பறந்த கொடியில்தான் அனுமார் இருந்து முன்பு இராமருக்குத் துணையாக இருந்தது போல அப்போது கிருஷ்ணரோடும் இருந்தார்.

மகாபாரதப் போர் மும்முரமாக நடந்தது. வில்லுக்கு விஜயன் என்று பெயர் பெற்ற அர்ஜுனனும் மற்ற

பாண்டவர்களும் கடும் போர் புரிந்து வெற்றி பெற்றார்கள். கிருஷ்ணனின் உதவியும் அனுமாரின் ஆசியும் இருக்கையில் பாண்டவர்களுக்கு வெற்றி கிடைக்காமலா போய்விடும்?

துச்சாதனன் தானே முன்பு தலை மயிரைப் பிடித்து இழுத்து வந்து துரௌபதியை அவமானப்படுத்தினான்! அப்போது அவிழ்ந்த தலை முடியை அவனது ரத்தத்தை எடுத்துத் தடவித்தான் முடியப் போவதாக துரௌபதி சபதம் செய்தாள். பீமன் அவனைக் கொன்று அவனது மார்பிலிருந்து ரத்தத்தை எடுத்துக் கொடுக்க துரௌபதி அதைக் கூந்தலில் தடவி முடிந்து பீமன் கொண்டு வந்த சௌகந்த மலரைச் சொருகி வைத்துக் கொண்டாள். அது கண்டு அனுமார் திருப்தி அடைந்தார்.

கதைப் போரில் பீமன் துரியோதனனின் தொடையைப் பிளந்து அவனைக் கொன்றான் அதுவும் அவன் செய்த சபதமே. இவ்வாறு துஷ்டர்களான கௌவரவர்கள் ஒழிய தர்மசீலர்களான பாண்டவர்கள் வெற்றிக் கொடி நாட்டினார்கள்.

கிருஷ்ணர் அனுமாரைப் பார்த்து, "அனுமாரே! அன்று கொடிய அரக்கர்களான ராவணன் போன்றவர்களை அழிக்க ராமருக்கு உதவியது போல இப்போதும் இந்த அவதாரத்தில் எனக்குத் துணையாக இருந்திருக்கிறீர். தர்மம் வென்றது எனக் காட்டக் கொடியை உயர்த்தினீர்" என்று புன்னகை புரிந்தவாறே கூறினார்.

அனுமாரும் "நீங்கள் இருக்க என்ன பயம்? நாங்கள் செயலில்,



ஈடுபட்டோம். பலன்தானே கிட்டியது" என்றார். அப்போது கிருஷ்ணர் "நீர் செயல் வீரர் என உலகிற்கு எடுத்துக் காட்டி வருகிறீர்" என்றார்.

கிருஷ்ணர் இவ்வாறு கூறியது கேட்டு அனுமார் மிகவும் பெருமை கொண்டார். மகாவிஷ்ணுவின் அவதாரங்களே இராமரும் கிருஷ்ணரும். இராமாவதாரத்தில்தான் அனுமார் அவருக்கு எவ்வளவு விதத்தில் உதவி புரிந்தார்!

முதலில் அவர் இராமருக்கும் சுக்கிரீவனுக்கும் சிநேகிதம் செய்து வைத்தார். வானர வீரர்களுடன் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கச் சென்றார். இலங்கையில் சீதையைக் கண்டு அவள் கொடுத்த கணையாழியை இராமரிடம் கொண்டு வந்து கொடுத்தார். பிறகு சேது பந்தனம், இராவணனுடன் போர், சஞ்சீவி மலையையே பெயர்த்து வந்து இலட்சமணனின் உயிர் காத்தது, அயோத்தி திரும்பி பட்டாபிஷேகத்தில் இராமதாசனாக விளங்கியது. இவை எல்லாம் கர்ம வீரரான அனுமாரின் செயல்தானே.

இராமாவதாரம் முடிந்ததும் அனுமார் இராம நாமத்தை ஜெபித்தவாறே இமயமலையில் இருந்தார். கிழவரான போதிலும் அவருடைய சக்தியும் பலமும் குறைந்து விடவில்லை. வழியில் கிடந்த வாலைக் கூட பீமனால் நகர்த்த முடியவில்லை என்றால் அவரது உடலின் பலம் எப்படிப்பட்டது என அறியலாம். கிருஷ்ணாவதாரத்திலும் அனுமார் அர்ஜுனனின் ரதத்தின் கொடியில் இருந்து பாண்டவர்களுக்கு வெற்றி கிடைக்க ஆசி கூறி வந்தார். இவ்வாறு இராம பக்தரான அனுமார் தன்னை அண்டியவர்களுக்கு உதவி புரிந்து நல்லதையே செய்து வந்தார். இதனால்தான் அவரை எல்லோரும் ஆபத்து சமயத்தில் அபயம் கோரி வரலானார்கள்.

எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு எல்லோரையும் ஆசீர்வதித்து விட்டு அனுமார் கந்தமாதன மலைக்குச் சென்று ஜெபித்துக் கொண்டிருந்தார்.





# வேண்டவே வேண்டாம்!

**மா**ப்பிள்ளை மகாலிங்கம் கல்யாண மாகி நான்கு மாதத்திற்குள் ஐந்து தடவை வந்து விட்டாரே என்று அவனது மாமியார் மங்களம் ஆதங் கப்பட்டுக் கொண்டாள். மாப்பிள்ளை வரும்போதெல்லாம் தனக்கு வெல் லச் சீடை மிகவும் பிடிக்கும் என்று கூறி அதை செய்யச் சொல்லி வாங் கிக் கொண்டு போனான். அவள் பெண்ணும் கணவனுக்குப் பரிந்து பேசவே மங்களம் என்ன செய்வது என்று திகைத்துத்தான் போனாள்.

ஒருமுறை அவள் தன் பெண்ணி டம் "என்ன சியாமளா இது? இப்படி அடிக்கடி வருகிறாயே? என்னால் ஈடு கொடுக்க முடியவில்லையே. என்ன செய்வது?" என்று கேட்டாள்.

அவளது பெண்ணும் "அம்மா! அவர் தினமும் காலையில் எழுந்து பல் துலக்கியதும் இரண்டு மூன்று வெல்லச் சீடைகளைச் சாப்பிட்டுத் தான் பழக்கமாம். அதனால் நீ செய்து தான் கொடுத்தாக வேண்டும்" என்று கூற அவளுக்குக் கவலைதான் அதி கரித்தது.

அவளுடைய கவலைக்கு முக்கிய காரணம் அவளுக்கு வெல்லச் சீடை சரியாகச் செய்யத் தெரியாதது தான். அதற்காக ஒவ்வொரு முறையிலும் லட்சுமியிடம் சொல்லிச் செய்ய வேண்டி வந்தது. தன் பெண்ணும் மாப்பிள்ளையும் ஊருக்குக் கிளம்பும் போது அவள் ஒரு பெரிய டின் நிறைய வெல்லச் சீடைகள் கொடுப் பாள். பத்தே நாட்களில் அவற்றைத் தின்று தீர்த்து விட்டு மறுபடியும் அவர்கள் வந்து நிற்பார்கள்.

அவன் மனைவி சியாமளா ஜாடை மாடையாக மாமியார் வீட்டிற்கு அடிக்கடிப் போக வேண்டாம் என்று கூறியும் மகாலிங்கம் அதைச் சட்டை செய்யாமல் தன் மனைவியையும்

- பாபநாசம் சாமா -



விடுவாள்" என்றாள்.

அவள் வேலைக்காரன் வேலுவைக் கூப்பிட்டு "நீ இப்போதே லட்சுமியிடம் சொல்லி வெல்லச் சீடைகள் தயார் செய்து கொடுக்கச் சொல்லி அங்கேயே இருந்து சாயந்திரத்திற்குள் வாங்கி வா" என்று சொன்னாள். வேலுவோ அன்று தன் மனைவியுடன் அவளது தாயாரின் வீட்டிற்குப் போக எண்ணி இருந்தான். அதைத் தள்ளிப் போடவா வேண்டும்! அட கடவுளே என்று எண்ணிக் கொண்டே மங்களம் கொடுத்த அரிசி வெல்லம் எண்ணெய் முதலியவற்றை வாங்கிக் கொண்டு முதலில் தன் வீட்டிற்குச் சென்றான்.

அங்கு தன் மனைவியிடம் "இன்று நான் உன்னை அழைத்துக் கொண்டு உன் ஊருக்குப் போக முடியாது. எஜமானியம்மாள் ஒரு வேலை வைத்து விட்டாள். அதை இன்றைக்குள் செய்து முடிக்க முடியாது" என்றான். அவன் மனைவியும் "நான் எப்போதாவது என் பிறந்த வீட்டிற்குப் போகலாம் என்று நினைத்தால் கூடப் போக முடியவில்லை. ஆனால் உன் எஜமானியின் மகள் மட்டும் தன் கணவனோடு மாதம் இருமுறை வந்து விடுகிறாள். அது அவள் அதிர்ஷ்டம். என் விதி இப்படி" என்று அலுத்துக் கொண்டாள்.

வேலு லட்சுமியின் வீட்டை அடைந்த போது அங்கு குழந்தை

அழைத்துக் கொண்டு அவளது பிறந்த வீட்டிற்குப் போய் வந்தான். இதென்ன வம்பாய்ப் போய்விட்டதே என்று மங்களம் நினைக்கலானாள்.

ஒருமுறை மகாலிங்கமும் சியாமளாவும் வந்து இரண்டு நாட்களான போது அவளது தந்தை "நீ இன்று சாயந்திரமா ஊருக்குப் போகப் போகிறாய்?" என்று தன் மகளிடம் கேட்டார்.

அப்போது மங்களம் குறுக்கிட்டு "மாப்பிள்ளை வெல்லச் சீடை டின் இல்லாமல் நம் வீட்டு வாசற்படியிலிருந்து கீழே இறங்க மாட்டார். நான் இப்போதே லட்சுமிக்கு ஆள் அனுப்புகிறேன். அவள் இன்று சாயந்திரத்திற்குள் செய்து கொடுத்து

களின் பெரிய கூட்டமே இருப்பதைக் கண்டான். வேலு லட்சுமியிடம் மங்களம் கூறியதைச் சொல்லவே, அவளோ "உன் எஜமானி ஒரு பைசாகூடக் கொடுக்காமல் வேலை மட்டும் வாங்கிக் கொள்கிறாள். இது வரை ஐந்து தடவை வெல்லச் சீடை செய்து கொடுத்து விட்டேன். பைசா பெயரவில்லை. இன்று என்னால் ஒன்றும் செய்ய முடியாது என் அக்காவின் குழந்தைகள் வேறு வந்திருக்கிறார்கள்" என்று சொன்னாள்.

அதைக் கேட்ட வேலு திகைத்தும் போனான். இந்த வெல்லச் சீடை விவகாரத்திற்கு ஒரேயடியாக முற்றுப் புள்ளி வைக்க வேண்டும் என்று அவன் எண்ணினான். அவனுக்கு மின்னல் போல ஒரு யோசனை தோன்றியது. அவன் தன் எண்ணத்தை லட்சுமியிடம் கூறி "இன்று இந்த வெல்ல சீடை சாக்கில் உனக்குப் பணமும் கிடைக்கும். இனி என் எஜமானிக்காக இதைச் செய்ய வேண்டியும் இராது" என்றான்.

லட்சுமியும் "அப்படியா? எப்படியாவது இந்தத் தொல்லை ஒழிந்தால் போதும். மாதத்தில் இரண்டு தடவை அடுப்படியில் மணிக்கணக்காய் இருந்து வெல்லச் சீடை தயாரிக்க வேண்டி இருக்கிறது. அதற்காகப் பணமாவது கிடைக்கிறதா? இல்லையே. சரி, என்ன செய்ய வேண்டும்" என்று கேட்டாள். வேலுவும் தன் திட்டத்தைக் கூறினான்.



லட்சுமியும் "நீ சொன்னபடியே செய்கிறேன். இனிமேல் இந்தத் தொல்லையே இராது" என்று கூறி மகிழ்ந்தாள். வேலு திரும்பிப் போய் மங்களத்திடம் அன்று மாலைக்குள் வெல்லச் சீடை தயாராகாது என்று கூறவே மாப்பிள்ளை மகாலிங்கம் பயணத்தைத் தள்ளிப் போட்டான்.

அன்று மாலை மகாலிங்கம் வீட்டின் பின்புறமுள்ள மாமரத்தின் கீழ் உட்கார்ந்திருந்தான். அப்போது வேலு அவனை அணுகி "ஐயா! லட்சுமி நமக்கு நாளைதான். வெல்லச் சீடை செய்து கொடுக்க முடியும். என்று சொன்னாலும் இன்று தன் அக்காவின் குழந்தைகளுக்காக அசல் நெய்யில் வெல்லச் சீடைகளைச்



செய்து வைத்திருக்கிறாள். அவற்றை குழந்தைகள் தின்று கொண்டிருந்த தைப் பார்த்தேன். அடடா! என்ன வாசனை! அப்போது என் நாக்கில் நீர் ஊறியது. பார்த்தாலே சாப்பிடு சாப்பிடு என்கிறது" என்று சப்பைக் கொட்டிக் கொண்டு கூறினான்.

அதைக் கேட்ட மகாலிங்கம் "அப்படியா! அந்தச் சீடைகள் எனக்குக் கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்" என்று பெருமூச்சு விட்டவாறே கூறினான். வேலுவும் "நாம் லட்சுமியின் வீட்டிற்குப் போகலாம் குழந்தைகள் நிறையச் சாப்பிட்டு விடுவார்கள் என்று எண்ணி அவள் சீடைகளை ஜாடியில் போட்டு பரண் மீது வைத்ததை நான் பார்த்தேன். இருட்டியதும் நாம் போய் அந்த ஜாடியிலிருந்து கொஞ்சம் எடுத்துக் கொண்டு வந்து விடலாம்" என்றான்.

மகாலிங்கமும் "அது எப்படி முடியும்?" என்று கேட்கவே வேலுவும் "இதுவரை உங்கள் மாமியார் இந்த லட்சுமிக்கு வெல்லச் சீடை செய்து கொடுத்ததற்கு என்று ஒரு பைசா கூடக் கொடுக்கவில்லை. நாளை அவள் செய்து கொடுக்கும் சீடைகளுக்கு நீங்கள் முப்பது ரூபாய் கொடுக்கும் சாக்கில் அங்கே நாம் போகலாம். மற்றதை நான் கவனித்துக் கொள்கிறேன்" என்றான்.

மகாலிங்கம் இதற்கு ஒருவாறு இசைந்து வேலுவுடன் கிளம்பிச் சென்றான். லட்சுமியின் வீட்டை அவர்கள் அடைந்த போது லட்சுமி "மாப்பிள்ளை ஐயா வந்திருக்கிறாரே என்ன விசேஷம்?" என்று ஆச்சரியப் பட்டவள் போலக் கேட்டாள்.

மகாலிங்கமும் "நீ சீடை செய்வதற்காக முப்பது ரூபாய் கொடுத்துப் போக வந்தேன்" என்று கூறிப் பணத்தைக் கொடுத்தான். அப்போது வேலு "லட்சுமி! ஓடிப்போன உன் கணவனைப் பட்டணத்தில் என் மச்சான் பார்த்துப் பேசினானாம்" எனவே அவள் "அப்படியா! வா வெளியே போய் பேசலாம். மாப்பிள்ளை ஐயா இங்கேயே இருக்கட்டும்" என்றாள்.

வேலுவும் மகாலிங்கத்திற்கு ஜாடை காட்டி விட்டு லட்சுமியுடன் வெளியே

சென்றான்.

அவர்கள் போனதும் மகாலிங்கம் சமையலறைக்குப் போய் பரண் மீதிருந்த ஜாடிக்குள் கைவிட்டு கைக்குக் கிடைத்த உருண்டைகளை எடுத்து மேல் துண்டின் நுனியில் வைத்து முடிந்து கொண்டான். பிறகு மறுபடியும் கைவிட்டு அவன் ஒரு உருண்டை எடுத்து வெல்லச் சீடை என்று நினைத்து சட்டென வாயில் போட்டுக் கொண்டான்.

அப்போது அவனது வாயில் எரிச்சல் கண்டதோடு செவ்வெறும்புகள் வேறு கடிக்கலாயின. கைகளிலும் செவ்வெறும்புகள். அவன் எண்ணியது போல ஜாடியில் வெல்லச் சீடைகள் இருக்கவில்லை. இருந்தவை புண்ணாக்கு உருண்டைகளே.

முகமெல்லாம் செவ்வெறும்புகள் கடிக்கவே மகாலிங்கம் வீட்டின் பின்புறம் ஓடினான். வலியோ தாங்க முடியவில்லை க்த்தவோ அழவோ முடியாமல் மதில் சுவர் ஏறி மறுபுறம் குதித்தான். அப்போது வேலு அங்கு நின்று கொண்டிருந்தான்.

அவன் மகாலிங்கத்திடம் "என்ன ஐயா! லட்சுமியிடம் சொல்லிக் கொள்ளாமல் கூட ஓடி வந்து விட்டீர்களே" என்று கேட்கவே அவனும் "கத்தாதே எல்லாம் அப்புறம் சொல்கிறேன். முதலில் நான் இப்போதே இங்கிருந்து போய் விட வேண்டும். ஆனால் இதை யாரிடமும் சொல்லி விடாதே" எனக் கூறி பத்து ரூபாயை வேலுவின் கையில் திணித்து விட்டு ஓடினான்.

மாமியார் வீட்டை அடைந்த மகாலிங்கம் மங்களத்திடம் "அத்தை! இனி வெல்லச் சீடையே வேண்டாம். நான் எண்ணெயிலோ நெய்யிலோ செய்த எதையுமே சாப்பிடக் கூடாதென்று வைத்தியர் சொன்னார். நாளை காலையிலே ஊருக்குக் கிளம்புகிறேன்" என்றான். மறுநாள் அவன் தன் மனைவியோடு தன் ஊருக்குப் புறப்பட்டும் போய் விட்டான்.

மங்களம் திகைத்ததோடு சந்தோஷமும் அடைந்தாள்.






# குமரனின் கனவு

குமரன் ஒரு கிராமத்தின் வாலிபன் ஆடு மாடுகளை மேய்ப்பவன். நல்ல தைரியசாலி. அதனால் அவன் எப் போதும் தான் ராஜாவாகிப் போர் புரிவது போல எண்ணிக் கொண்டே இருப்பான்.

ஒரு நாள் குமரன் ஆடு மாடு களை மேய விட்டு விட்டு ஒரு மரத் தடியே படுத்தான். அவனுக்குத் தூக்கம் வந்தது. அப்போது ஒரு கனாக் கண்டான். அதில் அவன் ஒரு மலை மீதேறி அங்கு உச்சியில் ஒரு சிம்மாசனத்தைக் கண்டு அதில் உட்கார்ந்து கொண்டான் அவனருகே ராணியின் வேஷத்தில் ஒரு பெண் உட்கார்ந்தாள். அவள் தலையில் கிரீடமும் இருந்தது.

அவன் "ராஜாவாகி விட் டேன்" என்று கத்திக் கொண்டே கண் விழித்தான். அப்போது சிம்மா சனமோ, ராணியோ இல்லாதது கண்டு தான் கண்டது கனவே என் பது அவனுக்குத் தெரிந்தது. இது போல மறுநாளும் அவன் ஆடுமாடு களை மேய விட்டு மரத்தடியே படுத்துத் தூங்கிய போது முன் தினம் கண்ட அதே கனவைக் கண் டான். மூன்றாவது நாளிலும் அவன் மாடுகளை மேய விட்டும் படுத்துக் தூங்குகையில் முன்தினம் கண்ட கனவையே மறுபடியும் கண்டான்.

மூன்று நாட்களிலும் ஒரே கன வைக் கண்டதால் அவன் மனம் தான் கண்டிப்பாக ராஜாவாகி விடப் போவதாக உறுதியாக நம்பியது. நான்காவது நாள் அவன் மாடுகளை மலைப்பகுதியில் மேயவிட்டு விட்டு மலையின் உச்சிக்குப் போய்ப் பார்த் தான். ஆனால் அங்கு சிம்மாசனமோ ராணியோ இருக்கவில்லை. ஆனால் சற்று தூரத்திலுள்ள மாணிக்கபுரி தான் அவன் கண்களுக்குத்

-சந்தியா கிருஷ்ணன்-

தெரிந்தது.

அவன் ஆடுமாடுகளை ஊரில் விட்டு விட்டு மறுநாள் காலையில் மாணிக்கபுரிக்குக் கிளம்பினான். வெகு தூரம் நடந்தபின் பசி எடுக்கவே ஏதாவது ஊர் தென்பட்டால் அங்கு போய் சாப்பிடலாம் என நினைத்தான். ஆனால் அந்தக் காட்டுப் பாதையில் ஒரு சிறு கிராமம் கூடத் தென்படவில்லை. மேலும் இருட்டியும் விட்டது.

அவன் அன்றிரவை ஒரு மரத்தடியில் படுத்துக் கழிக்க நினைத்து ஒரு மரத்தடியே படுத்தான். அப்போது சற்று தூரத்தில் குதிரைகள் வந்து நிற்கும் ஒலியையும் இருவர் பேசுவதையும் அவன் கேட்டான். அவர்கள் சற்று தூரத்திலுள்ள பாழடைந்த ஒரு வீட்டிற்குப் போகப் போவது அவர்களது பேச்சிலிருந்து தெரிந்தது. அவன் அவர்கள் புறப்பட்டபோது அவர்களுக்குத் தெரியாமல் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றான்.

அது ஒரு பாழடைந்த இடம். அது திருடர்களின் மறைவிடம் என்று அவனுக்கு விளங்கி விட்டது. அதனால் அவன் யாரும் பார்க்காத ஒரு இடத்தில் மறைந்து கொண்டு மற்றவர்கள் என்ன செய்கிறார்கள், என்ன பேசுகிறார்கள் என்று கவனிக்கலானான்.

சற்று நேரத்தில் இன்னும் பலர் குதிரைகளில் வந்து இறங்கி அந்த வீட்டிற்கு வந்தார்கள். எல்லோரும் ஓரிடத்தில் ஒன்று கூடினார்கள்.





அப்போது குள்ளநரி என்பவன் "தலைவா! இன்று எனக்கும் ஒரு அதிசயப் பொருள் கிடைத்தது. இது ஒரு படைத் தலைவனின் தலைப் பாகை இதைத் தலையில் அணிந்து கொண்டு அம்புகள் எய்ய வேண்டும் என்று விரும்பினால் இதிலிருந்து மூன்று பக்கங்களிலும் அம்புகள் கிளம்பிச் செல்லும்" என்றான்.

தலைவனும் "ஓகோ! உனக்கும் ஒரு அதிசயப் பொருள் கிடைத்ததா? இதுவும் நமக்கு மிகவும் உதவும். இதையும் தனியாக எடுத்து வை. குண்டுக் கரடி! இன்று நீ என்ன கொண்டு வந்திருக்கிறாய்? எடுத்து வை" என்றான்.

அப்போது அவர்கள் தலைவன் போலத் தென்பட்டவன் "சரி. யார் யார் என்னென்ன கொண்டு வந்திருக் கிறீர்கள்? அவற்றை எடுத்து வையுங் கள்" என்றான்.

அப்போது கோட்டான் என்பவன் "தலைவா! இன்று எனக்கு ஒரு அதிசயச் சட்டை கிடைத்தது. அந்தச் சட்டையின் பைக்குள் கை விட்டால் கை நிறையத் தங்க நாணயங்கள் கிடைக்கும்" என்றான்.

அதைக் கேட்ட தலைவன் மகிழ்ந்து "பேஷ். அதைத் தனியாக வை. நமக்கு மிகவும் உதவியாக இருக்கும். சரி, குள்ளநரி! நீ என்ன கொண்டு வந்திருக்கிறாய்? காட்டு பார்க்கலாம்" என்றான்.

மூன்றாவதாக குண்டுக் கரடி என்பவன் "தலைவா! இன்று எனக்கு ஒரு குத்துவாள் கிடைத்தது. நாம் போர் வீரர்கள் வேண்டும் என நினைத்து இந்தக் குத்து வாளைத் தரையில் ஒரு குத்து குத்தினால் நூறு வீரர்கள் தோன்றுவார்கள்" என்றான்.

அதை எல்லாம் கேட்ட அவர் களது தலைவன் "பேஷ்! அந்த மூன்று பொருள்களையும் அந்த மூலையில் வையுங்கள். தேவைப்பட்ட போது எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளலாம்" என்றான். அவர்களும் அந்த விசித்திரப் பொருள்களை மூலையில் வைத்தார்கள்.

திருடர்கள் எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கையில் குமரன்

சத்தமிடாமல் எழுந்து போய் மூலை யில் வைக்கப்பட்ட மூன்று அதிசயப் பொருள்களையும் எடுத்துக் கொண் டான். பிறகு அங்கிருந்து அவன் அப்போதே கிளம்பி மாணிக்கபுரியை நோக்கி வேக வேகமாகச் சென்றான்.

கடைசியில் அவன் மாணிக்க புரியை அடைந்து விட்டான். அவன் அரண்மனை வாசலுக்குப் போய் தான் மன்னனைக் காண வந்திருப்ப தாக அங்கிருந்த காவலாளிகளிடம் கூறினான். அப்போது அவர்களது தலைவன் "யாரப்பா நீ? மன்னரைக் காண்பது எளிது என்றா நினைத்து விட்டாய்?" என்று கேட்டான். குமர னும் "என் பெயரைச் சொன்னால் உடனே உள்ளே போகச் சொல்வீர் கள். நான்தான் மாவீரன் குமர சிம் மன்"என்றான்.

அத்தலைவனும் "ஓ! போரில் ஆயிரக்கணக்கில் வீரர்களைக் கொன்று வெற்றியடையச் செய்த மாவீரர் குமரசிம்மரா தாங்கள்? வாருங்கள், நானே தங்களை மன்னனிடம் அழைத்துச் செல் கிறேன்" எனக் கூறி அழைத்துச் சென்றான்.

தர்பாரில் மன்னனோடு இளவர சியும் இருந்தாள். குமரன் அவளைக் கண்டதும் கனவில் தான் கண்ட ராணி போல இருப்பதைப் பார்த் தான். அதனால் தன் கனவு கண்டிப் பாகப் பலிக்கப் போகிறது என்று எண்ணினான்.



அவனைக் கண்ட மன்னன் "உனக்கு என்ன வேண்டும்?"என்று கேட்டான். அப்போது அவன் தன் னிடமுள்ள தலைப் பாகை, குத்து வாள் ஆகிய இரண்டின் சக்தி பற்றி மன்னனிடம் கூறினான். தான் ஒரு மாவீரன் என்றும் சொன்னான். உலகையே வென்று அந்த மன்ன னுக்குக் கொடுப்பதாகவும் கூறினான்.

அதைக் கேட்ட மன்னன் மகிழ்ந்து "முதலில் என் எதிரி மாளுவ நாட்டு மன்னனை வென்று வா பார்க்க லாம்" என்றான். குமரனும் "நான் அவனை வென்று வருகிறேன். அதற் குப் பின் இளவரசியை எனக்கு மணம் செய்து வைக்க வேண் டும்" என்றான் சற்றும் தயங்காமல்.

மன்னனும் சிரித்தவாறே அதற்கு இணங்கினான். பலசாலியான மாளுவ மன்னனை வென்று விட்ட வீரனுக்கு தாராளமாக இளவரசியை மணம் செய்து வைக்கலாமே!

குமரன் சில வீரர்களோடு மாளுவ மன்னனுடன் போர் புரியச் சென்றான். மாளவ மன்னன் ஆச்சரியப்பட்டான் ஏனெனில் மாணிக்கபுரி மன்னன் அவனிடம் அதுவரைப் பயந்து கொண்டிருந்தான். ஆனால் இப்போது திடீரென அவன் தாக்குதலை ஆரம்பித்திருக்கிறான் என்றால் அதற்கு ஏதோ காரணம் இருக்கவே இருக்கும் என்று நினைத்தான். போர் மூண்டது. குமரனும் தலைப்பாகையை உபயோகித்து அம்புகளை எய்தும் குத்துவாளைக் குத்தி நூற்றுக்கணக்கான வீரர்களை வரவழைத்தும் போர் புரிந்து மாளுவ மன்னனின் படையை அழித்து அவனைப் புறமுதுகு காட்டி ஓடச் செய்தான்.

வெற்றி பெற்று வந்த குமரனை மன்னன் மரியாதைகளுடன் வரவேற்று "எனக்கு நான் விரும்பியபடி மாப்பிள்ளை கிடைத்தாகி விட்டது. என் மகளைக் குமரனுக்கு மணம் செய்து வைக்கிறேன். இவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து என் நாட்டையும் இந்த மாவீரனுக்கே கொடுக்கிறேன்" என்றான்.

இளவரசியும் குமரனை அப்போது தான் கவனித்தாள், குமரனோ அவளைப் பார்த்தவாறே இருந்தான். இளைஞனும் வீரனுமான அவன் தனக்கு ஏற்ற கணவன் என எண்ணி அவள் மகிழ்ந்தாள்.

குமரனுக்கும் இளவரசிக்கும் திருமணம் விமரிசையாக நடைபெற்றது. அதன் பின் பட்டாபிஷேகமும் நடக்க குமரன் அந்நாட்டின் மன்னாகி விட்டான்.

அவன் கனவு பலித்தே விட்டது. அவன் மன்னனுமாகி ராணியையும் அடைந்து விட்டான். மாவீரனை மணந்ததால் இளவரசியும் மகிழ்ச்சியே அடைந்தாள்.



# இயற்கை விநோதங்கள்

## ஒரு காலப் பறவைகள்!

உலகில் 9600 ரகப் பறவைகள் உள்ளனவாம். ஆனால் அவற்றில் 6000 ரகப் பறவைகள் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே போகின்றனவாம். மேலும் 1000 ரகப் பறவைகள் முற்றிலும் அழியும் நிலையிலும் உள்ளன. இதற்குக் காரணம் மனிதன் காடு, மரங்களை அழிப்பதுதான். தான் வாழ இடம்வேண்டும் என அவன் இவற்றை அழிப்பதால் பறவைகள் இருக்க இடமில்லாமல் போய்விட்டது. ஐரோப்பாவின் வெள்ளைக் கொக்குகளும் வட அமெரிக்க மஞ்சள் மூக்குக் குயில்களும் இப்போது அழிந்து போன ரகங்கள் என்பதற்கு இதுவே காரணம்.

## முட்டையிடும் கலை!

குளிரைப் போக்க நாம் போர்வையையும் அனல் மூட்டி கதகதப்பையும் ஹீட்டர்களால் வெப்பத்தையும் அடைகிறோம். பறவைகள் இவற்றிற்கெல்லாம் எங்கே போகும்? குளிரிலிருந்து தப்ப இயற்கையே அவற்றிற்கு சக்தி அளிக்கிறது. முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பதில் 'மல்லிபோல்' என்ற வகைப் பறவை முட்டை இடும்போது ஆண் பறவை ஒரு மீட்டர் ஆழமும் 3 மீட்டர் அகலமுமான குழியைத் தோண்டி இலைகளை அதில் பரப்புகிறது. அவை உலர்ந்ததும் துவாரங்கள் செய்ய பெண் பறவை அவற்றுள் ஒவ்வொரு முட்டையாக இடும். முட்டை பொரிய தக்க சூடு உள்ளதா என ஆண் பறவை சோதித்து சூடு இல்லாவிட்டால் மணல் போட்டு குஞ்சு பொரிக்க வைக்கிறதாம்.



## இந்தியாவில் ராட்சஸப் பல்லிகள்!

நம் நாட்டிலும் டினோஜார் எனப்படும் ராட்சஸப் பல்லிகள் இருந்திருக்கின்றனவாம். குஜராத்தில் கேரா மாவட்டத்தில் 1000 பல்லி முட்டைகள் கிடைத்துள்ளன. இவை 11 செ.மீ. நீளம் 7 செ.மீ. அகலமானவை. இவை மிகவும் கனமானவை. இவை டினோஜாரின் முட்டைகளாக இருக்கலாம் எனக் கருதுகிறர்கள். இந்த முட்டைகள் 65,000,000 வருடங்களுக்கு முந்தையனவாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்**



M. Lakshmi



M. Lakshmi

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ மே 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600 026**

---

## மார்ச் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **பழகப் பழக அன்பு வளரும்**
இரண்டாவது போட்டோ : **பார்க்கப் பார்க்க ஆசை மலரும்**
பரிசு பெற்றவர் : **எம். கீதா, சென்னை - 21.**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள் அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்